என்பது ஆனந்தத் தாயீன்ற அருட்குழவியின் மழலைச்சொல். இப்படியாகப் பரங்கருணை யாகிய மாம்பழந் தின்றவர் ஆனந்தக் கொழுப்பேறித் "தேன் மயக்கம் தீராத" பிரேமரங்களாய் ஹ்ரீங்காரம் செய்துகொண்டு திரிவார்கள். அப்படி யென்றால் "நாதானுசந்தானம்" செய்வதே தொழிலாய்த் தொழிலியற்றுவார்கள் என்றபடி. இவர்கள் உலகத்தில் பக்குவிகளான பச்சைப் புழுக்களைத் தெரிந்தெடுத்துக் கொண்டுபோய் அவர் உள்ளத்திலுள்ள "இல்லறம்' என்கிற கூட்டில்வைத்துச் சதா கொட்டிக் கொட்டி† பிரேமரகீட நியாயத்தால் யமன் வாய்க் கிரையாகப் பிறந்த பூச்சிகளைத் தேன் குடித்து ரீங்காரம் செய்யும் வண்டுகளாக மாற்றுவார்கள். இப்படி கொட்டுப் பட்டுக் குளவியானவர்களுக்குப் பின்னர்ப் புழுஜன்மமில்லை. தாமரையிலுள்ள தேனையருந்த வெகு தூரத்திலிருந்து அதன் வாசனை யறிந்து வண்டுகள் ரீங்காரம் செய்துகொண்டு வராநிற்க, அந்தத் தாமரையின் கீழிருக்கும் தவளைகள் அதன் வாசனை யறியாது வீணே அவமாய்க் கத்திக் கொண்டு காலத்தைக் கழிக்கும். இந்த வுண்மையறிந்த 'எமர்ஸன்' என்னும் அமெரிக்கா தேசத்து ஆத்மஞானி, "Let the Current that knows its way."—"தன்வழியறிந்து நடக்கும் தர்மத்தைத் தடைசெய்யாதே: அது போனவழியில் விட்டுவிடு" என்று சொன்னார். பகவானும் அர்ச்சுனனுக்கு ஸ்வதர்மத்தையே மேலாக உபதேசித்தார். ஆகையால், கர்மதர்ம ரஹஸியமறிந்தவர்கள் நைஷ்கர்ம ஸித்திபெற்று "பாரிலே முளைத்தெழுந்த பண்டிதப் பராபரமாய்"ச் சீர்பெற்றிருந்து வாழ்வார். உயர் லக்ஷியத்தைப் பற்றற்று சிந்தைபால்பற்றி, தர்ம கர்ம ரஹஸியமறிந்துஉள்ளறிவுகாட்டு முண்மை வழிபற்றி நடப்பவர் ஸத்யாநந்த சபையில் ஆனந்த நிருத்தமிடும் சபாநடேசனது திருவருட் சேவைக்குப் பாத்திரராகிறார்கள். அப்படிப் பட்ட திருச்சேவை கண்ட பாக்கியத்தால் "12-வது ஆருத்ராதரிசனமாம்" ஆனந்த சபா நடேசர் பிறந்தநாளை நானிறந்து அவர்பாதம்பற்றிய நாளாகக் கொண்டாடிக் குதூஹலமடைந்தேம். இன்று சபா நடேசருக்கு அபிஷேகம் நடப்பித்து அவர் திருப்பாதத்தில் சமர்ப்பித்த துண்டுப்பத்திரம் பக்தகோடிகளுக்கு வரப்பிரஸாதமாக வழங்கப்பட்டது. அத்துண்டுப் பத்திரத்தை விவேகசிந்தாமணியை வாசிப்போரெல்லாம் வாசித்துமகிழ, இதன் மேலேட்டின் மூன்றுவது நாலாவது பக்கங்களில் மறுபடியும் அச்சிட்டிருக்கிறேம். இங்கிலீஷிலுள்ள அதன் கருத்தே பழனியாண்டவர் திருப்பதிகமாகவும் ஆருத்ராதரிசன வரலாறுகவும் தமிழில் வரையப்பட்டிருக்கிறது. பழனியாண்டவர் தந்த திருவருட் பிரஸாதமாம் "குருபரானந்த"த்தை இன்னெரு பக்கத்தில் அப்படியே அச்சிட்டிருப்பதைப் பார்க்கவும்.

ஓம்தத்ஸத்

குருவாரம்
திருவாதிரைநாள் } ஆண்டானடிமை.

† 'தஹரோபாஸனை விசேஷத்தால்' என்றபடி.

---

# AN OPEN LETTER TO ALL.

## TO THE EDITOR.

Sir,—Will you kindly permit me the hospitality of your columns to address an Open Letter to All. I seek it after 12 years of silent work and hard *tapas* (subdugation of the senses) to which I devoted myself heart and soul.

I have availed myself of the priceless opportunities which their Majesties' gracious presence in our midst offers for sowing good thoughts in the now open and receptive hearts of their loyal subjects, to celebrate the Founder's Day of the Ananda Mission or the 12th anniversary of the same which fell on the 4th instant, with *eclat*. There was *Abhishekam* and *Archana* to Sri Ananda Natesa from 2 A.M. to 6 A.M. in the temple, while I kept watch and vigil and prayed during the whole night, distributing in the morning copies of the enclosed leaflet among the assembled *Bhaktas*.

I have also forwarded copies of it to His Excellency the Governor of Madras, to H. E. the Governor-General of India and through him to the Right Hon'ble Lord Crewe, the Secretary of State for India and to His Imperial Majesty the King-Emperor himself, seeking of them one and all their sympathy for the cause of the Mission which is "the Mission of the Empire and the World."

"A good thought sown, a good word reaped, when duly cultivated with understanding sympathy and observant forethought leads, by the working of the Immutable Law of Self-Attunement'—which is the Great eternal Law of Being and Becoming' which forms the basis of all and every true Religion,—to incalculable good in the end."

That is how "the better-mind of India" works for the good of mankind and the elevation of the world; and the Ananda Mission conceived at *Chidambaram* after the Arudradarisanam of 1901 and planned on Christmas Eve of 1902 and openly established on the First of January 1903, has been working silently and unobtrusively on these lines for the uplift of humanity by the lifting up of human thought above considerations of the lower-self.

I solicit the genuine sympathy of All from His Imperial Majesty the King Emperor and his August representatives in India, down to the proverbial "man in the street," who, in his own person, in a divine way represents the *vox-populi* in which shines the *Vox-Dei* in the form of "the average intelligence of the people;"—I want the sympathy of All for the cause of Truth, of Peace and Goodwill among men, which the Ananda Mission has at heart and for which it is working under the guidance of the spiritual hierarchy of saints and sages who have left their footprints in the sands of time and in the hearts of the good and the true, who wish to serve their generation in the selfless spirit of those Great Souls who from time immemorial have worked for the uplift of humanity and the betterment of the world.

With prayers for the Good of the Empire and the long life of their Majesties who have evinced their personal sympathy and affection for their subjects in a truly Royal Manner, I beg to remain, yours for ever, in the cause of the Mission,

Lalitalaya,
Madras, *S.*
*5th Jany. 1912.*

C. V. SWAMINATHA AIYAR,
*for the Honorary Secretary,*
*Ananda Mission.*

## The Right of Entry into the Land of the Supreme.

## உயர்பூமிகையின் உட்பிரவேச பாத்தியதை.

—— :-:) ——

"Faith like that of the child is the one thing needful. Such faith leadeth one to God."

"The calculating intellect of the world weigheth things with an eye to worldly loss and gain. Man's limited reasoning seeth not far enough. It hath no right of entry into the land of the Supreme. It is faith—the faith of a child—which leadeth one forth into that land,"—*Sri Ramakrishna Paramahamsa Deva.*

"ஓம்பூ:" என்று சொன்னால் பூப்ரஸ்தமெல்லாம் தானாகப் பிரவேசித்து ஆளலாம். இங்ஙனே சொல்லின் திறனறிந்து சொல்வதே சொல்லாம். சொல்லென்பது பரை, பச்யந்தி, மத்தியமை, வைகரியென நால்வகைப்படும். இந்த நாலின் மூலமறிந்து அவற்றின் காலமறிந்து, அதாவது மாத்ரை (அளவு) அறிந்து, தேவதையறிந்து, உளமறிந்து உபயோகிக்கும் உண்மையறிந்து உபயோகித்தால் சொல்லின் வீரியங் குன்றாது நல்ல பூமியிலிட்ட வித்து முளைப்பது போல் சங்கல்பஸித்தி தானே யுண்டாகும்.

பக்தி யில்லாத புத்தி பிரயோசனமில்லை. சாணளப்பான் பூச்சிபோல் வயிறு வளர்த்துக் கொண்டிருக்கும் வழியொன்றையே தான் பார்க்கும் பேதபுத்தி. "கண்டதே காட்சி கொண்டதே கோலம்" என்பது நல்ல பழமொழி. "பத்தியினால் வாங்கி புத்தியினாலாராய்ந்தேன்" என்பது தீக்ஷாவழி.

"அஹம்பாவத்தாலே யழிந்தான் துரியோதனன்" என்பது மற்றோர் பழமொழி. அஹம் எல்லாரிடத்துமே யிருக்க, துரியோதனன் மாத்திரமே யதனால் அழிந்தவனாவானேன்? என்று கேட்கலாம். இது ஒரு நல்ல கேள்விதான். "அஹம் அஸ்மி" என்பதற்கும் "தேஹோஹாஹம்" என்பதற்கும் மெத்த வித்தியாஸமுண்டு. ஸர்வாந்தர்யாமியா யிருக்கப்பட்ட நான் தானே தானாயிருக்கிறேன் என்று அறிந்து தன்மயமானால் அஹம் (நான் என்னும் பாவம்) அறிவை மறைக்காது. அப்படிக்கின்றி "இந்தமட்டும் இந்தமட்டும் என்கோடு" என்று எல்லை குறித்துக்கொண்டு குண்டுச்சட்டிபோ லிருந்தால் அந்த குண்டுச்சட்டியை விட்டொழித்தல் கூடாத காரியமாகிறது. குண்டுச்சட்டி யுள்ளமட்டும் அதற்கு உள்ளும் புறம்பும் உண்டு. அந்த குண்டுச் சட்டியை சமுத்திரத்தில் போட்டமுத்தினாலும் அதற்கு உள்ளும் புறமும் ஜலம் நிறைந்திருக்குமே தவிர, குண்டுச்சட்டி யொழி

ந்து போகாது. ஜலத்தை விட்டெடுத்தால் குண்டுச்சட்டி குண்டுச்சட்டியாகவே தானிருக்கும். அது மறைந்துபோகாது. சமுத்திரஜலம் அளவற்றிருந்தாலும் குண்டுச்சட்டியில் குண்டு சட்டி ஜலந்தான் நிற்கும். அந்தச் சட்டியும் ஓட்டை உடைசலானல் அந்த குண்டுச்சட்டி ஜலமும் ஒழுகிப்போய்விடும். ஓட்டைச் சட்டி "லொட லொட்டை" யென்றுதான் சப்தம் செய்யும். அதற்கு உண்மையான த்வனியில்லை இதே பாதிரியாகத்தான் உண்மையான பேச்சுக்கும் வாச்சாமாத்திரமான பேச்சுக்கும் வித்தியாஸமுண்டு.

உண்மையான வார்த்தை அநாஹத சப்தத்திலிருந்து (தஹராகாசம் பிறந்தவிடத்திலிருந்து) உண்டாவதால், அதன் த்வனி உண்மைச் சோதியை உள்ளடக்கிக் கொண்டிருக்கும். "த்வனே ரந்தர்க்கதம் ஜோதிஃ" என்ற சுருதி வாக்குப்படி அந்த த்வனியினுள்ளே யிருக்கும் ஜோதி. அதற்குள்ளே வாக்குப்பிறந்தவிடமாகிய மனவிருக்கிறது. அந்த ஜோதிர்மனஸே சிருஷ்டி ஸ்திதி ஸம்ஹாராதி முத்தொழிலும் செய்யவல்லதாம். திரிகாலதரிசனம் என்பது இந்த ஜோதிர்மனஸுக்கே விளங்கும். இந்த மனசும் லயமாகும்படி சித்தவிருத்தி நிரோதம் செய்தவன் யாரோ, அவனே புருஷன் (புருஷ சப்தத்துக்குரியதீரன்). மற்றவர்களெல்லாம் பேடிகளாவர்.

இப்படியாக சங்கல்ப மூலமறிந்து, சங்கல்ப விதிபறிந்து, சங்கல்ப விகல்பமற்றுச் சலிப்பற நின்ற மனதினுற்சிந்தியாது சிந்தித்து மௌனத்தே காதின்றிக்கேட்ட அசரீரிவாக்கை யுணர்ந்து அதன் வழிப்பட்டு நடந்தால், மனம் ஒருவழிப்பட்டு மந்திர வித்தியை அளிக்கும்.

மந்திரஸித்தி யென்றாலும் வாக்குஸித்தி யென்றாலும் காரண காரிய தோரணையினல் ஒன்றே. வாக்குஸித்திபெற, மூக்குநுனியில் லக்ஷிய மிருத்தல் வேண்டும். அப்படி யென்றால் வடசாரி இடசாரியாயோடும் சரவோட்டத்தை மூக்கு மையத்தில் நிறுத்தி, புருவமத்தியிற் கொண்டு போய்த் திரிவேணி சங்கமம் என்கிற ஸ்தானத்திலிருந்து பார்த்தால் 'ஜீவகளை' கண்ணுக்குத் தெரியும். சரீரத் திரியங்களுக்கும் அபிமானியான ஜீவ தத்துவத்தைத் தரிசித்தால் தாரணத்தியான ஸமாதி முதிர்ச்சியாம் யோகஸம்யமத்தில் திரிக்கு தரிசன திரிசிய மென்கிற திரிபுடி தரிசனம் ஸித்திக்கும். திரிபுடி தரிசனம் ஸித்தித்தால், உள்ளன்பு தானுகவூறும். அதிலிருந்து ஜீவகாருண்யம் பெருகும். ஜீவகாருண்யம் பெருகப் பெருக பரங்கருணை ஸித்திக்கும். பரங்கருணை ஸித்தித்தால் பத்தி வெள்ளம் பெருகும்.

பக்தியுள்ள விடத்தில் சிரத்தையு முண்டு. பக்தியும் சிரத்தையும் முத்திக்கு வழியாம். பக்தி சிரத்தையோடு செய்யும் நிஷ்காம கருமத்தால் அஹ மென்னும் தோண்டி நழுவி விழுந்துடைந்துபோம். "தோண்டி யுடையவுமே தோற்பையும் தான் கழியும்." தேஹபாவம், அஹம்பாவம் இரண்டும் விட்டால், "ஹரஹர" வென்ன அமர்ந்திடச் செய்யும்.

" ஹரஹர வென்ன அரியதொதன்றில்லை
ஹரஹர வென்ன அறிகிலர் மாந்தர்
ஹரஹர வென்ன அமரருமாவர்
ஹரஹர வென்ன அறும் பிறப்பன்றே."

என்பது திருமந்திரோபதேசம்.

இப்படி யாரொருவர் "ஹரஹர" வென்று உண்மையாய்ச் சொல்ல வறிந்தார்களோ அவர்கள் உயர் பூமிகையின் உட்பிரவேச பாத்தியதை பெற்றவர்களாவர்.

பூமிகை யென்றாலும், க்ஷேத்திர மென்றாலும், ஸ்தலம் என்றாலும், நிலம் என்றாலும் அவஸ்தா பேதத்தால் ஒன்றையே குறிக்கும். மனிதன் உண்மையாயிருந்து உள்ளபடி எதை நினைக்கிறானே அது தானே சம்பவிக்கிறது. "யத்பாவம் தத்பவதி." நல்லார் நலத்தையே சிந்தித்து நன்மை யடைகிறார்கள். அல்லார் தீதையே சிந்தித்துத் தீமையை யடைகிறார்கள்.

ஆதலால் "தனக்குத் தானே பகைவனும் நட்டானும்" என்று திருமந்திரம் ஓதிய திருமூல தேவர் நன்றாகக் கூறியுள்ளார்.

மனிதன் இப்படித்தானே தனக்குப் பகையும் நட்டானுமா யிருந்து பிறர்மேல் பழிபாவத்தைச் சுமத்துகிறான். இதனாலுண்டாகும் சண்டை பூசல்களுக்கு அளவு சங்கையில்லை. கோர்ட்டும், கச்சேரியும், போலீஸும், ஜெயிலும், மாஜிஸ்திரேட்டும் ஜட்ஜியும் ஓயாது ஒழியாது வேலைபார்க்கிற தெல்லாம் இந்த அற்புதச் சண்டையை விசாரிக்கத்தான்.

---

## "Renunciation" and "the Worldly Mind."

## "Vascillation unto the Last."

## "சாவதானால் ஸந்நியாஸம்; பிழைப்பதானால் பெண்டாட்டி."

(*)

"பற்றொன்று பற்றொன்று பவோபவம், மற்றொன்று மற்றொன்று மனோபவம்" என்பது ஆன்றோர் பழமொழி. "பவோபவம்," அதாவது தெய்வசிந்தனை குடிகொண்ட "ஜோதிர்மனஸானது" எல்லாப் பற்றையும்விட்டு பரமபத மொன்றையே பற்றிநிற்கும். இதற்குத்தான் தியான யோகம் என்றும் "தியானிபுத்தா" என்றும் சொல்லுகிறது. "தியானம் நிர்விஷபம் மநஃ" என்பது சுருதி வாக்கியம். நிர்விஷயப் பட்ட ஜோதிர்மநஸானது முக்திவழியைநாடி, பகவத் பாதமாகிய பரமபதத்தையே தைலதாரைபோல் இடையறாத்தியானத்தால் சிந்தித்துச் சிந்தனையும் நழுவியவிடத்து "அங்க லிங்க சங்கம" விதிபற்றித் திவ்யாகாரமாய் விளங்கும். இது தான் பவோபவம்: பகவத்தியானம்.

"மனோபவம்" என்பது என்னவென்றால் குரங்கு சாகை (கிளை) விட்டுச் சாகைபற்றித் தாண்டித் திரிவதுபோல், விஷயமாகிய காட்டில் ஒன்றுவிட்டு மற்றொன்று பற்றி சங்கல்ப விகல்பங்களாகிய சேஷ்டைசெய்து திரியும். மனோபவம் என்பது உலகப்பற்றுள்ள மனதின் சுபாவம். பவோபவம் என்பது மோக்ஷப்பற்றுள்ள மனதின் சுபாவம்.

பூர்வத்தில் டில்லி சக்ரவர்த்தியாண்ட காலத்தில் "வாயால் வல்லவன்" என்கிற ஒரு பிராமணன் மந்திரி ஸ்தானத்தை வகித்திருந்தான். டில்லிபாக்ஷா ஒருநாள் பெரியதர்பார்கூடி தனது பிரஜைகள் சிற்றரசர்கள் எல்லாரையும் வரவழைத்து முன்னர் இந்திரப்பிரஸ்தத்தில் தர்மராஜா இராஜசூயயாகம் செய்து சம்ராட்பட்டம் சூட்டிக்கொண்டதுபோல், தான் இந்தியா முழுமைக்கும் ஏகசக்ராதிபதியா யிருப்பதைத் தெரிவிக்கவும் இராஜ்யத்தில் தர்மம் தலையெடுக்கவும், தான் தர்மபுத்திரனைப்போல "சம்ராட்பட்டம்" சூட்டிக்கொள்ளவேண்டுமென்று தெரிவித்தார். மந்திரி பிரதானிகளெல்லாரும் சரிசரியென்று அதற்கு வேண்டிய ஏற்பாடுகள் செய்தார்கள். இராஜபுரோகிதர் உலகத்தில் தர்ம்ம ஸ்தாபனம் செய்ய தர்மராஜ்யம் தலையெடுக்கலாயிற்றென்று சுருதிஸ்மிருதி இதிஹாஸங்களைக் கொண்டு தர்ம்மோபதேசம் செய்தார்.

டில்லி பாக்ஷாவும் "வாயால்வல்ல" தன் மந்திரியைக் கூப்பிட்டு தாரகவெளிபோலும் தமது ஸிம்மாஸனத்தை விளங்கச்செய்யும் நக்ஷத்திரக் கூட்டங்களில் ஒன்றாக உம்மை அங்கீகரித்தோம் என்று சொல்லி தமது மந்திரிக்குப் பெரியதோர் பட்டங்கொடுத்து, மந்திரியைப் பார்த்து "ஓ-பிராமணோத்தமரே! நீர் ரிஷிகள் பரம்பரையில் அவதரித்த உத்தமராயிற்றே! இல்லறம் பெரியதா? துறவரம் பெரியதா? ஸம்ஸாரம் பெரியதா? ஸந்யாஸம் பெரியதா? இதை யாரத்திர அமர்ந்து யோஜித்து உம்முடைய முடிவான அபிப்பிராயத்தை நாளைக்குத் தெரிவியும்" என்று ஆஜ்ஞாபித்தார்.

"வாயல்வல்ல" பிராம்மணன் சாணிக்கிய சூத்திரமெல்லாம் சுற்றவராகையால், உடனே சண்டப்பிரசண்டமாக பிரசங்கம் செய்யச் சொன்னால் ஒருமணிநேரம் மூச்சுவிடாது பேசியிருப்பார். ஆனால், டில்லிபாக்ஷா சாமான்னிய மானபேர்வழியல்லவே! அவர் கேள்வியைக் கேட்டுவிட்டு, உடனே "உம்முடைய முடிவான அபிப்பிராயத்தை நாளைத் தெரிவியும்" என்றல்லவோ ஆஜ்ஞைபிட்டிருக்கிறார். "ஆரத்தீர அமர்ந்து யோஜித்து" என்றும் சொல்லியிருக்கிறாரே! அவர் எண்ணம் எப்படியிருக்குமோ!

மந்திரி யென்னதான் வாயால்வல்லவராயினும், "கற்றோர் கல்வியும் மனப்பழக்கம்" என்ற ஔவையார் சொற்படி, "மனப்பழக்கம்" படியாதவர். 'மனப்பழக்கம்' என்றால் என்ன? "டுக்ருங்கரணே" யென்று வியாகிரணம் படிப்பதல்லவே! 'மனப்பழக்கம்' "யோக சூத்ரத்தில் "சித்தவிருத்திநிரோதஃ" என்றல்லவோசொல்லப்பட்டிருக்கிறது! வாயால் வல்லவனாகிவேண்டி "டுக்ருங்கரணே" யென்று வியாகரணம் படித்துக்கொண்டிருந்த ஒரு மூடமதியைப் பார்த்தல்லவோ பகவத்பாத சங்கராசாரிய ஸ்வாமிகள் 'பஜகோவிந்தம்! பஜகோவிந்தம், பஜகோவிந்தம் மூடமதே!" யென்று வற்புறுத்தியோதினார். அந்த பகவத்பாத சங்கராசாரியரே வந்து உபதேசித்திருந்தாலும் அவரைத் தர்க்கத்துக்கிழுத்து வென்றிருப்பார் வாயால்வல்லவரான மந்திரி. அல்லது கோர்ட்டுக் கிழுத்து நஷ்டப் பிராது செய்தாவது ஜயித்திருப்பார். கோவணாண்டியான ஸந்யாசியின்மேல் நஷ்டப்பிராதெடுத்து ஜெயித்து என்ன லாபம்? என்று கேட்கலாம். அவரை ஆறுமாசம் ஸிவில் ஜெயிலில் அடைத்து வைக்கவாவது முடியுமே! அந்த சாஹஸ காரியத்தையாவது செய்து உலகத்தில் கீர்த்தி பெறலாமல்லவா!

ஆனால், இப்பொழுது ஆஜ்ஞைபிட்டவர் டில்லி பாக்ஷா! அவருக்குச் சற்று மனங்கோணித்தானால் பிரமாதம் வந்து விடும்! மந்திரிவேலை யெல்லாம் போய்விடும்! அல்லாமல், வேறு அநர்த்தம் விளைந்தாலும் விளையும். தலை தப்பினால் தம்பிரான் புண்யமென்கிற கதையில் வந்து விட்டால் என்ன செய்கிறது!—என்று உள்ளுக்குள்ளே யொருபக்கம் உதைத்துக் கொண்டது!

வாயால் வல்ல பிராமணன் தர்பாரை விட்டுச் சென்றதும், "இல்லறம் பெரியதா? துறவறம் பெரியதா? ஸம்ஸாரம் பெரியதா? ஸந்நியாஸம் பெரியதா?" என்று ஆலோசனை செய்யத் தொடங்கினார். ஒரு நியாய ஸ்தலத்தில் அல்லது மஹா ராஜாக்கள்கூடிய தர்பாரில்தானாலும், இரு கக்ஷியில் ஒன்றை யெடுத்துக் கொண்டு பக்ஷவாதம் செய்யச் சொன்னால் வாயால்வல்லபிராமணர் வெகு நன்றாய் வாதம் செய்திருப்பார். ஆனால் திரிகரண சுத்தியாக இந்த அநர்த்தக் கேள்விக்குப்பதில் சொல்வதென்றால் அவருக்கு ஒன்றும் தோன்றவில்லை! அவருக்கு புத்தி மயக்கங்கொண்டது; தலை சுழன்றது. யோசனைமேல்யோசனையாக ஒன்றும் ஓடவில்லை!

துறவறம் பெரிது என்று ஸ்தோத்திரம் செய்தால் கையில் "தண்டு கமண்டலு"வைக் கொடுத்து கோவணாண்டியாகத்தானே க்ஷேத்திர யாத்ரை செய்துவாரும் என்று அனுப்பிவிட்டால் என்ன செய்கிறது? என்கிற அச்சம் ஒரு பக்கத்தில் பாதிக்கலாயிற்று. அப்படிக்கில்லை, இல்லறம் தான் பெரியது! ஸம்ஸாரத்துக்கு மிஞ்சிய போகமில்லை யென்றால், குடுமியையும் பூணூலையு மறுத்துக் கொண்டு தாடியை வளர்த்துக் கொண்டு பிராம்மணப்பிரஷ்டனாகும்படி நிர்ப்பந்தித்தால் என்ன செய்கிறது? என்கிற பயம் ஒரு பக்கத்தில் வேதனை விளைத்தது. இப்படியாக ஒரு வழியும் போத முடியாமல் மனம் தத்தளிக்கவே ஏக்கம் பிடித்து ஆரியர் காயலாவாக விழுந்து விட்டார். ஏங்க

மும் தூக்கமும் மனக்கவலையுற்றவிடத்தும் அற்றவிடத்துமன்றி மற்றப்படிக்கில்லை யென்பது ஸநாதநமான தர்மம். மனக்கவலையில்லாவிட்டால் ஏக்கமுமில்லை, தூக்கமு மில்லை.

ஏக்கமும் தூக்கமுமில்லா விட்டால் சோகமோக மிரண்டுமில்லை. சோகமோக மில்லாவிட்டால் மனது ஏகாக்ரப்பட்டு அலைபற்ற சமுத்திரம் போல் சங்கல்ப விகல்பமற்று சாந்தோபசாந்தமாய் விளங்கும். சாந்தோப சாந்தத்தால் மனம் விஸ்ராந்தி யடைந்தால் மனத் தெளிவு உண்டாகும். "திரைபற்ற நீர் போல் சிந்தை தெளிந்தார்க்குப் புரையற்றிருந்தான் புரிசடையோனே" என்ற திருமந்திரோபதேசப்படி மனத்தெளிவுண்டாக, சந்தேக விபரீதங்களற்றுப்போம். ஆனால் இந்த மனத் தெளிவுக்கும் வாயால்வல்லவான பிராஹ்மண மந்திரிக்கும் எவ்வளவு தூரம்! பாபம்! பட்டாலல்லவோ தெரியும் பார்ப்பானுக்கு! வாச்சா ஞானத்துக்கும் கைவல்ய ஞானத்துக்குமுள்ள வித்யாஸம் அனுபவத்தில் தான் தெரியவரும். வேதாந்தப் பேச்சைப்போல் வெட்டிப் பேச்சு வேறு கிடையாது!

வாயால்வல்ல பிராஹ்மண மந்திரி சிந்தாக்கிராந்தராய் சந்தேக விபரீதங்களால் பீடிக்கப்படவும் "தேஹம்" ஆடிக்காற்றி லகப்பட்ட துரும்புபோல் அல்லற்படத் துவங்கிற்று: ஜ்வரம் பிடித்து வர வர அதிகரித்தது! பலம் குறைந்தது! புத்தி மழுங்கிற்று! அந்தகன் கிட்டிவந்து பரிகாஸம் செய்வான்போல் "ஸம்ஸாரம் பெரியதா? ஸந்நியாஸம் பெரியதா?" என்று கேட்டுக் களகளவென்று சிரித்தான்.

"யமாய தர்மராஜாயா மிருத்யுவேச அந்தகாயச, வைவஸ்வதாய காலாய ஸர்வபூதக்ஷயாயச, ஔதும்பராய தத்நாய நீலாய பரமாத்மநே, விருகோதராய சித்ராய சித்ரகுப்தாயவை நம: சித்ரகுப்தாயவை நமோநம இதி."—பென்று வாயால்வல்ல பிராம்மணகுல திலகர் யமதர்மராஜாமுன் வாயிழந்து அவரை ஸ்துதிக்க லாயினர்.

வைவஸ்வதன்.—"ஸம்ஸாரம் பெரியதா? ஸந்நியாஸம் பெரியதா? சொல்!" என்றான்.

பிராஹ்மணன் விழிவிழி யென்று "மேட்டு வளையைப்பார்த்து" விழித்தான்.

வைவஸ்வதன் வார்த்தையைக் கேட்டு ஆப்தநேயர் ஒருவர், வாயிழந்து தவிக்கும் பிராமண மந்திரியை நெருங்கி, "ஆரியரே! காலன் கிட்டிவிட்டான்! வீண் யோசனையேன்! ஸந்நியாஸம் வாங்கிக்கொள்ளும்!" என்றார்.

கிட்டவிருந்த புத்ரமித்ர பந்துக்கள் அவரைக் கடிந்துகொண்டு "ஓய் நீர் யார்காணும் அவரிடம் போய் ஸந்நியாஸம் வாங்கிக்கொள்! என்று சொல்வதற்கு? வேணுமானால் நீர் ஸந்நியாஸம் வாங்கிக்கொண்டு போம்! அவரைத் தொல்லை செய்யாதேயும்!' என்றார்கள்.

வாயிழந்த வேதியர் வகைசொல்லத் தெரியாது விழித்தார்.

காலன்:—"ஸம்ஸாரம் பெரியதா? ஸந்நியாஸம் பெரியதா? சொல் சீக்கிரம்!" என்று வெருட்டுகிறான்.

வேதாந்த வேதியர்:—"அப்பனே என் சொல்லைக் கேட்பாய்! ஸந்நியாஸம் வாங்கிக்கொள்!"

அந்தியகாலம் கிட்டிய பிராஹ்மண மந்திரி:—ஐயோ! இந்தக் கேள்வி யென்னைவிட்ட பாடாகவில்லையே! கண் சுழன்று சித்தம் தடுமாறுகிறதே! அதோபார்! கருநீலம்போல் இருள் மேனி விளங்க நின்றுகொண்டு கேட்கிறான்! அவனைப் போகச்சொல்! போகச்சொல்!" சேவகர்கள் அங்கு மிங்கு மோடி எல்லாரையும் வெருட்டுகிறார்கள்.

வாயால் வல்லவர்:—"ஐயோ! அதோ நிற்கிறானே! அவன் இருவிழிகளையும் பார்க்க பயந்

கராமா யிருக்கிறதே! அவனைத் துரத்தி விடுங்கள்! துரத்தி விடுங்கள்!"—மனம் நெகிழ்ந்து உள்ளுக்குள் அழுகிறார்.

"ஸம்ஸாரம் பெரியதா? ஸந்நியாஸம் பெரியதா?" என்று ஆக்ரோஷத்தோடு பின்னும் ஒரு துவனி பிறந்தது.

வே-வேதியர்:—"ஆரியரே! ஸந்நியாஸம் வாங்கிக்கொள்ளும்! வாங்கிக் கொள்ளும்!"

ஆர்ப்பாட ஆரியர்:—டாக்டர் எங்கே? நான் பிழைப்பேனா? மாட்டேனா?

வே-வேதியர்:—பிழைத்தாலும் சரி, போனாலும்சரி! ஸந்நியாஸம் வாங்கிக்கொள்ளும்! இனிக்காலஹரணம் செய்ய வேண்டாம்.

ஆ-ஆரியர்:—டாக்டர் இனி நான் பிழைக்க மாட்டேனென்று உறுதி மொழி யெழுதிக் கொடுத்தால் நான் ஸந்நியாஸம் வாங்கிக் கொள்கிறேன்.

வே-வேதியர்.—டாக்டரே, என்ன சொல்கிறீர்?

டாக்டர்.—நான் என்ன யமதர்ம ராஜாவா! உறுதிமொழிச் சீட்டுக் கொடுக்க! அவனவன் தலைவிதி யெப்படி யிருக்கிறதோ! நான் ஏதோ சிகிச்சை செய்கிறேன்: பிழைத்தாலும் சரி! போனாலும் சரி! என்னுடைய தொழிலுக்குரிய சம்பளம் எனக்குச் சேரவேண்டியது ஒன்றுதான் எனக்கு உறுதியாய்த் தெரியும். அதற்கு வேண்டிய தண்டல் கணக்குச் சீட்டை அன்றன்றைக்கே யெழுதிக்கொடுத்து விடுகிறேன். அவ்வளவுதான் நான் செய்ய முடியும்! அதற்குமேல் என்னாலாகாது!

ஆரியர்.--அப்படியானால் அவர் ஒருகை பார்க்கட்டும். நான் பிழைக்க மாட்டேன் என்பது நிச்சயமாய்விட்டால் அப்புறம் ஸந்நியாஸம் வாங்கிக்கொள்வது நிச்சயம். மஹாமஹோபாத்தியாயரிடம் சொல்லி ஸந்யாஸ மந்திரத்தை யெழுதி வைக்கச்சொல். காஷாய வஸ்திரம் தயாராக விருக்கட்டும். இனிப்பிழைக்க மாட்டேன் என்பது நிச்சயமாய் விட்டால் ஸந்நியாஸம் வாங்கிக் கொள்வதும் நிச்சயந்தான். பிழைக்கலாமென்கிற எண்ணமிருக்கிற வரையில் ஸந்நியாஸ மந்திரமெல்லாம் உபந்நியாஸத்துக்கே யுதவும். சாஸ்திர வசனங்களை யெல்லாம் பார்த்து எழுதிவைக்கச் சொல். பிழைத்தெழுந்தால் பேஷான உபந்நியாஸம் செய்ய உதவும்.

வாயால் வல்லவருக் கிளையவரான "காலால் வல்லவர்"—அதுதான் சரி! பலே பாவா! பேஷ் அண்ணா! என்னண்ணா! என் முத்தண்ணா!" என்றுசொல்லி ஒருபுறத்தில் தலைகால் தெரியாமல் கூத்தாடினார்.

வே-வேதியர்:—இதென்னபேச்சு! இதென்ன கூத்து? "சாவதானால் ஸந்நியாஸம்! பிழைப்பதானால் பெண்டாட்டி!" யென்கிற கதையாக வல்லவோ விருக்கிறது! அத்யாவஸ்தையிலும் இந்த ஸந்தேகந்தானா! (இளைய தம்பியைப் பார்த்து) "பிள்ளாய்! இதென்ன கூத்து!"
காலால் வல்லவர்:—"ஓய் பேசாதேயும்! இடறி விழுந்தவனைக் காலால் உதைக்கவல்லவன் யான் என்பதை மறந்து விட்டாராஎன்ன! வாய் மூடும் சும்மா!

புத்ர மித்ரர்கள்.—"ஓய்! நீர் வேதாந்த வேதியர்தான்: வேதமுணர்ந்தவர்தான்: போதும்! உமது திருவாயை மூடும்! உமக்கு ஸந்நியாஸத்தில் பிரியமிருந்தால், இப்பொழுதே செய்து கொள்ளும்! காஷாயம் தயாராயிருக்கிறது! இந்த சமயத்தில் அவரிடம் போய் தத்துப்பித்தென்று உளராதேயும்."

ஆ-ஆரியர்.—டில்லிபாக்ஷா!-தர்பார்!-ஸம்ஸாரம்!—ஸந்நியாஸம்!—உபந்நியாஸம்!--உத்யோகம்!—என்று பிதற்றிக்கொண்டு மதிமயங்கித் தூங்குகிறார் (எல்லாரும் தலையைத் தொங்கவிட்டுக்கொண்டு அழுகிறார்கள்.) டாக்டர் "இங்கேயிருந்து சத்தம் செய்யாதேயுங்கள்! எட்டிப் போங்கள்! தூரப்போங்கள்! இனி ஒருவரும் என்னுடைய அனுமதியின்றி அவரிடம் போகக்கூடாது!" என்று தாக்கீது செய்துவிட்டுப் போகிறார்.

(போனவர் திரும்பிவரவில்லை!
படுத்தவரும் பிழைத்தெழுந்தாரில்லை!!)

——(-)——

## THE LORD OF PALNI'S GRACE—
## "GRANTING OF THE GREAT BOON."

### பழனியாண்டவர் திருவருட் பிரஸாதம்.



### குருபரானந்தம்.

ஆறுருவமோராறுப் அறுமுகனுமோருமுகமாய்த்
தேராருமூருராய்த் தேடேற்கோநீயோளித்தாய்!
ஈராறுயர்சேவியாய் இருந்திலேயோகாண்டற்கு!
வேறுருனேயன்றி விருப்புற்றளிப்பதற்கு!
தேறார்தேறுதற்கு தேவிபராசக்தியுடன்
வாரார்முருகய்யன் வர்ணமயில்வாகனமேல்!

### பழனியாண்டவர் திருப்பதிகச் சிறப்பு.

ஆண்டவன் சந்நிதியில் அரங்கேற்றற் காட்சி. (1-1-12.)

"பன்னூல்கற்றுறம்பேற்றைப்பன்னுள்கொண்டடைவதினு
"மின்னூல்கற்றஃதெய்தலெளிமையெனவுளங்கொண்டே
"பன்னூலினுளமிருக்கும்பயன்களெல்லாம்பரிந்தாய்ந்து
"சொன்னூலாமிந்நூற்குச்சுகியார்யார்மகியாதே!"—
என்றுற்றதென்றுசொன்ஞனென்னப்பன்முக்தய்யன்
நன்றுற்றதென்றுகொண்டேனடிமையவனடிதொழுதே!

### "வேலும்மயிலுந்துணேயளித்தல்.

ஆண்டானுக்கடிமையென்றேன் ஆண்டவனுமதுகொண்டு
ஆண்டானடிமைக்கடிமைசெயுமடியன்தானென்றுவந்து
தூண்டாமணிவிளக்காய்த் தூயமனத்துள்ளிருந்து
வேண்டாவரமுனக்குவேண்டுமென்றுவேண்டினேயே—
ஆண்டானடிமையாநீ ஆனந்தசபைநடுவே
வேண்டாதுவந்துழைக்கவேலுமயிலுந்துணேயென்ருன்!

ஓம்சரவணபவநமோநமஃ

ஸத்யாநந்த சாந்த அவதூதாத்மாநம்பஜே.

## Easy Lessons in Economics.

### Lesson VIII.

### குடிவாழ்க்கை.

### VIII. பாடம்.

வேலைக்காரர்களின் நாணயம்.

வேலை செய்வோர்களுடைய யோக்கியதைக் குறைவினல் விளையும் தீங்குகள் பல. வேலை செய்வோன் ஒருவனுல் அவனிடத்தில் நம்பிக்கையில்லாக் காரணத்தினலேயே மேற்பார்வைக்கு மற்றொருவன் அவசியமாய் வேண்டியிருக்கிறது. தொழில் செய்து வைப்பவன், "இவ்வளவு வேலை செய்தால் தான் இவ்வளவு கூலிக்கருகனுகிறன்" என்பது போன்ற திட்டங்களைச் செய்ய வேண்டியதும் அவசியமாகின்றது. வேலைக்காரர்களுடைய புத்திக் குறைவினலுண்டாகும் நஷ்டத்துடன் அவர்கள் சோம்பலாலும் தெரிந்து செய்யும் குற்றத்தாலும் நேரும் நஷ்டத்தையும் சேர்க்க வேண்டும். இதனல் வேலைக்காரர்களை நம்பி பெரும் தொழிலைத் தொடங்க பயப்படுவோர் பலர்.

நம்முடைய தேசத்திலிருந்து இங்கிலாண்டுக்கு நிலச்சரக்கு, பஞ்சு முதலியவைகள் விசேஷமாக ஏற்றுமதியாகிறது. இதில் நம்தேசத்தார் செய்கிற பிசகுகளினல், அதன் விலை குறைந்து போகிறது மன்றி, மற்ற தேசங்களிலிருந்து வரும் சரக்குகளுக்கு அதிக கிராக்கியேற்படுவதுடன், ஒருவன் புத்திக் குறைவினலோ, சோம்பலினலோ, வேண்டுமென்றே செய்யும் பிசகினல், ஒருதேசச் சரக்குகளுக்கே விலை குறைந்து போவது மன்றி தேசத்தாருக்கும் கெட்ட பெயரைக் கொண்டு வருகிறது.

நிலச்சரக்குகளில் ஈரமுள்ளதை சேர்ப்பதாலும், பருத்திக்காய்களின் தொட்டிகள் பொடிந்து பருத்தியுடன் கலந்திருப்பதை கவனியாமல் சிப்பங்களில் அடைத்துக் கட்டி விடுவதாலும், வேறு தேசங்களிலிருந்து போகிற சரக்கைப் போல் நம்மதேசத்திய சரக்கின்மேல் அவ்வளவு மோக முண்டாவதில்லை எனப்படுகிறது. புகையிலையைச் சரியாய் பதப்படுத்தத் தெரியாமையாலும், அதில் நடக்கும் சூதுகளாலும், அதிலுள்ள காரம் வெளிப்பட்டுப் போகாமல் கட்டத் தெரியாததாலும் அந்த வியாபாரத்திலும் சரியான விலை கிடைக்காமலும் போகிறதென்று தெரிய வருகிறது.

இத்தேசத்தில் தொழிலாளிகளுடைய வரும்படி குன்றியிருப்பதின் முக்கிய காரணங்கள் இரண்டு. பிறதேசத்தவர் யந்திரம் முதலிய சாதனங்களை யறிந்திருக்கின்றமையால் அவைகளினுதவியால் செய்து அங்கிருந்து வரும் கைத்தொழிற் சரக்கின் விலை சரஸமாயிருக்கின்றது. எப்பொழுதும் கையினுதவியைக் கொண்டே தொழில் முழுவதையும் நடத்திச் செய்யும் நம்முடைய தேசப் பொருள்களுக்கு வேலைக்குத் தக்கப் பிரதிப்பிரயோஜனம் கிடைப்பதில்லை. இக்காரணத்தினல் சொற்பகாலத்திற்குமுன் நெசவுத் தொழிலை செய்து வந்த பலர் தற்காலத்தில் பயிரிட்டும், கூலிவேலை செய்தும் ஜீவனஞ் செய்கின்றனர். நெசவுக்காரனையே கைக்கோளன் என்று கூறுவது தென்தேசவழக்கம். கைக்கோளன் பெரும் பஞ்சகாலத்திலும் பிச்சைக்குப் போகான் என்பதை யுணர்த்தும் பழமொழிகளு முண்டு. ஆனல் இப்பொழுதோ பிச்சைக்காரர்களில் அநேகர் கைக்கோளர் என்பதை பலர் ஒப்புக்கொள்ளுகிறர்கள்.

மேலும் வேலையைக் கெடுத்து காலதாமசம் செய்தால், வேலையதிகரித்துத் தங்களுக்கு அதிக காலத்திற்கு ஜீவன மார்க்கம் பெருகுமென்ற கெட்ட எண்ணத்தினல் நம்முடைய வேலைக்காரர்கள் சரிவர வேலையைச் செய்வதில்லை. இதனலன்றே அதிகபணம் போனலும் போகட்டுமென்று, மோசமும் காலதாமசமும்

செய்யாத ஐரோப்பியரிடம் நம்மில் பலர் தங்கள் வேலையைச் செய்யும்படி கொடுக்கிருர்கள். சென்னையில் இந்தியரால் நடத்தப்படும் அச்சுக்கூடங்கள் எவ்வளவோ இருக்கின்றன. இவைகளில் வேலைத்திறமையுடனும், காலஹரணமின்றியும் வேலையை முடித்துக் கொடுக்கும் அச்சுக் கூடங்களை ஒன்று, இரண்டு, மூன்று என்று விரல் விட்டு எண்ண வேண்டியதாயிருக்கிறதேயன்றி ஒவ்வொரு அச்சுக் கூடமும் வேலைத்திறமையாகவும், கால தாமதமின்றியும் வேலையைமுடித்துக் கொடுக்கக் கூடியதென்று கூறமுடியாதன்றே.

அநேக விடங்களில் நேர்த்தியாய் ஆபரணங்களைச் செய்யும் திறமை நம்முடைய தொழிலாளிகளுக்கிருந்தும் ஒன்றுக்குப் பதின் மடங்கு கூலி கொடுக்கச் சம்மதித்து ஆங்கிலேயருடைய வியாபாரச் சாலைகளில் நம்மில்பலர் ஆபரணங்களை வாங்குகின்றனர். அவ்வியாபார சாலைகளில் வேலை செய்வோர் நம்தேசத்தாரே யாயினும், அவர்கள் யாதொரு பிசகும் செய்யாதபடி மேற்பார்வை தகுந்தபடி இருப்பது கொண்டு, நாம் நம்பவிடமாகின்றது. நம்முடைய தட்டான் இரண்டு, மூன்று ரூபாய் கூலிக்குச் செய்யும் ஆபரணத்திற்கு அங்கிலேயர் வியாபாரச் சாலையில் பத்து, இருபது ரூபாய் கூலி கொடுத்து நாம் வாங்கும் ஆபரணம் பலவாகுமன்ருே ? கடியாரம் செப்பனிடுகிற ஓர் இந்து சொற்ப கூலிக்கு ஒரு கடியாரத்தைச் செப்பனிட உடன்படுவானுயினும், அவனிடம் அதை கொடுப்பதற்கும் பயந்து, அவன் கேட்கும் கூலிக்கு ஐந்து அல்லது எட்டுமடங்கு கூலிகேட்கும் அங்கிலேய செப்பனிடுவோனிடம் நாம் நம்பிக் கொடுக்கக் காரணம், வேலை சரிவர நடக்கும், மோசமிராது, கூறிய நாளில் திருப்பிக் கொடுப்பான் என்பவை போன்ற நம்பிக்கையே யாகும். இதனுலன்ருே இந்துக்களால் ஏற்பட்டு நடத்தப்படும் வியாபார சாலைகளுக்கும் அங்கிலேயருடைய நாமத்தை வைக்கிருர்கள்.

இப்படியே துணி வியாபாரத்தில் செட்டிச் சாயம், சுத்தமான பட்டு வெள்ளிச்சரிகை முதலிய விஷயங்களில் வித்தியாசமாகக் கூறுவதே நம்முடைய தொழிலாளிகளுக்கு சுபாவமாயிருக்கிறது. இதனுலன்ருே 'சரக்கு முடுக்கோ செட்டி முடுக்கோ' என்று பழமொழி வழங்குகின்றது. வியாபாரி மோசமில்லாதவனென்று ஜனங்களுக்கு நன்ருகத் தெரிகிற வரையில் அவன் கேட்கும் விலையை வாங்குகிறவர்கள் கொடுப்பது அரிது. இவ்வியாபாரத்தில் மோசம் போகிறவர்கள் அநேகரென்பதை யாவரும் ஒப்புக்கொள்ளுகிருர்கள். நம்தேசத்து ஸ்திரீகளுக்கு உபயோகப்படும் பட்டு சரிகை சேலை நெய்யும் தொழிலையும் ஆங்கிலேயரும் ஜப்பானியரும் ஆரம்பிப்பாராயின், இப்பொழுது நம் இராஜதானியின் சில ஜில்லாக்களில் சேலைகளைச் செய்து ஜீவனம் செய்யும் பல நெசவுக்காரர்கள் தங்கள் தொழிலைத் துறந்து, பயிரிடும் கூலிக்காரராகமாற நேருமென்பது திண்ணம்.

தொழிலாளிகளின் கட்டுப்பாடு.

நான் கணக்காகக் கூலி கொடுக்குமிடத்து, வேலையைத் தவக்கப்படுத்துகிற வேலைக்காரனும், செய்து முடிந்த வேலைக்குத் தக்கபடி கூலி கொடுக்கப்படும் பொழுது, வேலையைக் கெடுக்கிறவனும், பார்வைக்குப் பகட்டாயுள்ள சாமான்களைச் செய்து விற்க முயலும் முதலாளியும், சாமான்களுடன் பலவகையாயுள்ள உபயோகப்படாத குப்பைகளைக் கலந்து விற்க முயலும் வியாபாரியும் தேசத்தின் செல்வ விர்த்தியைக் குன்றச்செய்யும் பாபிகளாவார்.

ஒவ்வொரு இடங்களிலும் தொழிலாளிகள் ஒன்று சேர்ந்து மேற்கண்டவை போன்ற பிசகுகள் நடக்காவண்ணம் கட்டுப்பாடு செய்து கொண்டு தொழிலை நடத்துவாராயின், அவர்களுக்கு அதனுல் தொழில் சரிவர நடப்பதன்றி தேசத்தின் செல்வமும் பெருக்கெடுத்து பெரும் புகழையும் தேசத்திற்கே கொடுக்கும்.

சில விடங்களில், செல்வ விர்த்திக்குரிய புதிய முறைகளை சிலர் அநுஷ்டிக்க முன் வர அவற்றை நடக்க வொண்ணுதவண்ணம், பழய தொழிலாளிகள் தங்களுக்குள் கட்டுப்பாடு செய்துக் கொள்ளுவது வழக்கமாயிருக்கிறது. இப்படியே ஆங்கிலேய நாட்டிலும் சிறிது கால த்திற்கு முன் கையாலேயே நடந்து வந்த வேலையை இயந்திரங்களுடைய உதவியைக் கொண்டு நடத்தினல் வேலை குறையுமென்ற எண்ணத்தினல், இயந்திரங்களைக்கொண்டு வேலை நடத்துவதில்லையென்று கட்டுப்பாடு செய்த துண்டு. நமது நாட்டிலும் பிறஜாதியார் தங்களுக்கு நஷ்டமுண்டாகிறதென்று, கம்மாளர் பிறஜாதியாரைத் தங்களுக்கு உதவியாகச் சேர்த்துக்கொண்டு வேலை நடத்துவோரை ஜாதியினின்றும் விலக்க வேண்டுமென்று கட்டுப்பாடு செய்ததுண்டு.

நாசரீகம் அதிகமாய் மலிந்த இக்காலத்தில் பிறதேசங்களி லுபயோகிக்கப்படும் இயந்திரங்களையும் மற்ற பல வித சூக்ஷ்மங்களையும் கற்க முயலாது மேற்கண்ட விதம் கட்டுப்பாடு செய்வதினல் பிரயோஜன முண்டாகாது. இவ்வித கட்டுப்பாட்டை மதுரைபோன்ற நகரத்திலுள்ளோர் செய்து அதன்படி நடந்து வந்ததால், அவர்கள் சாமான்களுக்கு விலையுயர, அவ்வித கட்டுப்பாடில்லாத பெங்களூர், பூனா, பம்பாய் கள்ளிக்கோட்டை முதலிய விடங்களிலிருந்து ஏராளமான பாத்திரங்கள் மதுரை நகரத்திற்கே கொண்டுவரப்பட்டு குறைந்த கிரயத்திற்கு விற்கப்படுகின்றன. காலக்கிரமத்தில் இயந்திரங்களின் உதவியைக் கொண்டு செய்த பாத்திரங்கள் மேல்நாடுகளிலிருந்து இங்குவர மதுரை போன்ற ஊரிலுள்ள கம்மாளர் தங்கள் தொழிலை முற்று மிழக்கநேருர்.

ஆகையால் இப்பொழுதே ஒவ்வொரு பிரதேசத்திலுள்ள தொழிலாளிகளும் ஒன்றுசேர்ந்து, தங்களிற் சிலரை, இங்கிலாந்து, ஜப்பான் போன்ற விடங்களுக்கு அனுப்பியாவது, அவ்விடத்திலுள்ள சில தொழிலாளிகளை இங்குவரவழைத்தாவது, செவ்வையாக்வர், எளிதிலும் தொழிலை நடத்தும் வழியையறிந்து, தங்கள் தொழிலை செய்தாலொழிய கம்மாளருக்கும், நம் தேசநெசவு காரருடைய கதியே சம்பவிக்கும். கெவரன்மெண்டாரும் இவ்விஷயத்தில் உதவி செய்வது அவசியம்.

T. C. வேங்கடரமணய்யர்.

---

EXTRACTS.

## Ananda Mission Founder's Day.

## ஸத்யானந்தசபா நடேசர் ஆருத்ரா நாள்.

(:o:)

ஆன்மாக்களுக்காகச் செய்யும், படைத்தல் காத்தல் அழித்தல் மறைத்தல் அருள லென்னும் பஞ்ச கிருத்தியங்களையு மமைத்த வடிவமே நடேசமூர்த்தியாம் அது டமருகத்திலே படைத்தலும், அபயஹஸ்தத்திலே காத்தலும், அக்கினியேந்திய கையிலே அழித்தலும், ஊன்றிய திருவடியிலே மறைத்தலும் தூக்கிய குஞ்சித பாதத்தில் அனுக்கிரகமுமாகிய ஐந்து தொழில்களும் ஐந்து ஸ்தானங்களிலே யமையப்பெற்றது. அவருடைய நடனம், சூட்சும நடனம் ஸ்தூல நடனம், காரண நடனமென மூன்று வகைப்படும். அவற்றுள் சூட்சும நடனமாவது தன்னுள்ளே தன்னை விஷயீகரித்து அதிஷ்டான தேவர்களை யாட்டும் திருநட்னமாம். தூல நடனமாவது அடியார்களுடைய புருவமத்தியிலே அந்தர்யாமியாக நின்று சித்திரப்பாவை யாட்டுவோன் போல ஆட்டுவதாம். காரண நடனமாவது பதஞ்சலி வியாக்கிரபாதர் முதலிய பக்தசனங்கள் காணும்பொருட்டும், அபக்குவிகளாகிய நம்மவர்களுக்குப் பக்குவம் வருவிக்கும் பொருட்டுக் காட்டிய திருநடனமாம். அது அபக்குவிகளாகிய தாருகாவன இருடிகளுக்குப் பக்குவம் வருவிக்கும் பொருட் டவர்களா லேவப்பட்ட முயலகன் முதுகில் காலூன்றியாடிய திரு நடனமாம்.

"நமது ஆணவம் மாயை கன்மம் மாயேயம் திரோதாயி என்னும் பஞ்சபாசங்களை நிவிர்த்தியாக்கும் பொருட் டப்பெருமான் திருநடனஞ்செய்யுஞ் சபை

கள் தேவசபை, ராஜசபை, ஊர்த்துவ தாண்டவசபை சித்சபை, கனகசபை யென ஐந்துமாம். இவ்வைந்து மொருங்கே யமையப்பெற்ற ஸ்தலம் சிதம்பரமாம். கனகசபை சிதம்பரத்தினும், ரசிதசபை மதுரையினும், தாமிர சபை திருநெல்வேலியினும், சித்ர சபை திருக்குற்றாலத்தினும், ரத்தினசபை திருவாலங்காட்டினுமாக வமைக்கப்பட்டது.

"அப்பெருமான் இத்திரு நடனங்களைச் செய்யா தொழியின் நாமு மொன்றுந் தெரியாது கிடப்போம். "ஆட்டுவித்திடுபவன் அது செய்யாவழிக் கூட்டுடைப் பாவைகள் குலைவுற்றாலென" வென்றும், "காட்டவ னல்போலுடல் கலந்துயிரை யெல்லா, மாட்டுமொரு நட்டுவனெம் மண்ணலென வெண்ணாய்" என்றும், தேவாரத்திலே "நட்ட நள்ளிருளாடு நாதனூர் நவின்றுறைகோயில்" என்றுங் கூறியவாற்றாலுணர்க. ஒளியுடைக் கண்ணானது சூரியன் முதலிய வொளியுடைப் பொருளி னுதவிகொண்டு காண்பதேயன்றி நேரே காணமாட்டாதவாறுபோல வத்திருநடனத்தை நேரே காணுஞ் சக்தியில்லாத நமக்கவருடைய அபின்ன சக்தியாகிய சிவகாமி அம்மையாருடைய பேருதவி கொண்டு தரிசிக்கச்செய்யும் நிமித்தமே அத் தேவி யாரை நோக்கி ஆடுவதாம். மேலும்,

"உலகத்திலே யுள்ள சனங்க ளெல்லாரையும் உடுக்கோசையால் வாருங்களென்றழைத்து, உங்களை விருப்பு வெறுப்பால் பிறவிக் கண்ணே விழுத்துவதற்கு அஞ்சாதீரென்று அபயஹஸ்தம் கொடுத்துத், தமது இடக்கையிலுள்ள அக்கினியினாலதனை எரிப்பேனென்று மந்தகாசத்தா லுணர்த்தி, உங்களைப் பந்தித்த ஆணவத்தை இக்காலினால் கீழ்ப்படுத்துவேனென்று முயலகன் முதுகிலூன்றிய திருவடியாலுணர்த்தி, மேலே உங்களுக்குத் தருவதிந்தக் குஞ்சிதபாத மீழலென வரதஹஸ்தத்தினாலுணர்த்துவது மென்பது மொருகருத்து.

"நமக்குள்ள சிசு, பால, தருண, யௌவன, விருத்தாப்பிய, வார்த்தக்கிலேசமாகிய ஆறு பருவக் குற்றங்களையும், காமக் குரோத லோப மோஹ மத மாற்சரிய மென்னும் அறுவகைக் குணக் குற்றங்களையு மகற்றும்பொருட் டப்பெருமானொருவருடத்திலாறு தின மபிஷேகங் கொண்டருளிக் காட்சி கொடுப்பர்.

"சித்திரையி லோணமுதற் சேரானியுத்தரமாம்
சத்ததனு வாதிரையுஞ் சார்பாகும்—பத்திவளர்
மாசியரி கன்னி மருவுசதுர்த் தசிமன்
றீசரபி ஷேக தினம்."

"இத்திரு நடனம் தேவர்களுக்குத் தைமாசமுத லாறு மாசம் பகலும், ஆடிமாசம் முத லாறுமாச மிரவு மாதலின் விடிய ஐந்துநாழிகை யளவினதாகிய ப்ராம்ய முகூர்த்தமே பொழுது சிவத்தியானஞ் செய்தற்குரிய மார்கழிமாசத்துத் திருவாதிரையில் நிகழ்தலினாலக் காலம் விசேஷமாயிற்று.

"அவாந்தர சிருட்டியிலே அப்பெருமான் வாமகாத் திலேந்திய மானினது குறிப்பை யுணர்த்துகின்ற மார்க்கசீர்ஷ மென்னும் மார்கழி மாசமே யத்திரு நடனோற்பத்திக் கிசைந்த மாசமும் சிவோற்பத்திக் கிசைந்த நாள் திருவாதிரையாகலினத்தினம் விசேடமாயிற்றென்றுங் கொள்ளப்படுதலினால் மார்கழி மாசத்துத் திருவாதிரை நக்ஷத்திரத்தின் விடிய ஐந்து நாழிகையே அபிஷேகங்கொண்டு காட்சி கொடுத்தருளும் விசேஷ காலமாயிற்று. அபிஷேக மென்பது சிவானுக்கிரக வொழுக்கின் நனைவு.

"உலகத்திலே செனன மெடுத்துப் பிறந்தவர்களாகிய நாம் செனனமெடுத்ததின் பயனாகி இத்திரு நடனத்தைத் தரிசித்துப் பேறடைவதே நமக்கெல்லாமின்றியமையாத பெறுதற்கரிய பெரும் பேறாம்.

"சோறிடுநாடு துணிதருங் குப்பை தொண்டனென் பறைக்கண், டேறிடுங் கைக ளிறங்கிடுந் தீவினை யெப்பொழுதும், நீறிடுமேனியர் சிற்றம்பலவர் நிருத்தங்கண்டா, லூறிடுங் கண்க ளுருகிடும் நெஞ்சமென் னுள்ளமுமே."

"செஞ்ஞின்ற நீலமலர்கின்ற தில்லைச் சிற்றம்பலவன், மைஞ்ஞின்ற வொண்கண் மலைமகள் கண்டு மகிழ்ந்துநிற்ப, நெஞ்ஞின்றெரியும் விளக்கொத்த நீல மணிமிடற்றான், கைஞ்ஞின்ற வால் கண்டால் பின்னைக் கண்கொண்டு காண்பதென்னே"

—, சைவப்பிரசாரகர் கீரிமலை எரம்பையர்.

சிதம்பர க்ஷேத்ராலய சர்வசுதந்தர பார்த்தியாளர்களான பொது தீக்ஷிதர்கள் இந்தியாவின் முடிசூட்டு மஹோத்சவ விஷயமாய் ரூபா ஆயிரம் செலவு செய்து உத்தியோகஸ்தர்களையும் வியாபாரிகளையும் பிரபுக்களையும் அன்பர்களையும் வரவழைத்து அதிர்வெடி, வாணவேடிக்கை, அபிஷேகம், நைவேத்தியம் தீபாலங்காரம், அன்னதானம், பெரிய மேளக் கச்சேரி, சின்னமேளக் கச்சேரி முதலிய வைகளால் எல்லோரும் சந்தோஷத்துடன் ஸ்ரீமந் நடராச சந்நிதியில் இராச சக்கிரவர்த்தி ஐந்தாம் ஜோர்ஜ் அவர்களும், இராணி சக்கிரவர்த்தினி மேரி அம்மை அவர்களும் சுகமாய் இராஜ்ய பரிபாலனம் பண்ணவேணுமென்று பிரார்த்தித்தார்கள்,

EXTRACT.

## மார்கழிமாத விசேஷம்.

——:-:——

ஆயுங்கால், தேவர் தினத்துப் பகற்காலமானது, தைமாத மாதியாய் ஆனி ஈறான ஆறுமாதங்களும், இராக்காலமானது ஆடிமாத முதல் மார்கழி அந்தமான ஏனைய ஆறுமாதங்களுமாம். தேவருடைய பகற்காலத்தில் சூரியனானவர் பூ-வுலகத்தாருடைய வடதிசையிலும், இராக்காலத்திலே, அப் பூவுலகத்தாருடைய தென்திசையிலும் முறையே சஞ்சரிக்கின்றனர். இவ்வாறு மானுட வருடந்தோறும் வடபாகப் பாதிக் கோளத்தைச் சார்ந்த மகரமுதல் மிதுனமீறாகிய ஆறு இராசிகளிற் சூரியன் சஞ்சரித்தலை உத்தராயணம் அல்லது வடசஞ்சாரமென்றும், தென்பாகப் பாதி கோளத்தைச் சார்ந்த கர்க்கடக முதற் றனு வீறாகிய ஏனைய ஆறு இராசிகளிற் சஞ்சரித்தலை தக்ஷிணாயனம் அல்லது தென்சஞ்சார மென்றுங் கூறுவர். இவ்விரு மனுஷ அயனங்களுந் தேவர்களுக்கு ஒரு நாளாயிருக்கின்றது. எனவே, சூரியன் தனுவிற் சஞ்சரிக்குங் காலமாகிய மார்கழிமாதமே தேவர்களுக்குச் சூரியன் உதிக்க ஐந்து நாழிகைக்கு முன்னதான பிராமிய முகூர்த்தமாகும். பிராமிய முகூர்த்தமானது தேவாராதனை, கடவுட்பூசை, அருட்பாவோதல், சிவநாம சங்கீர்த்தனம்,கல்விகற்றல் முதலியவற்றிற்கு விசேடமான காலமென்பது அநுபவ சித்தாந்தமாம். எக்காலத்தினும் அக்காலம் மிக்க விசேடமுள்ளதாகுமென நூல்களுஞ் சொல்லும். பிற விடயங்களிற் சென்று, ஒய்ந்தடங்கியிருக்கும் மனமானது, பிராமிய முகூர்த்தத்திலே, பல வழிப்படாதொருவழிப்பட்டுத் தெற்றென முற்றேநிற்றலாகும். ஆதலால், இம்மாத முழுவதும் யாவரும் விடியற்காலத்திற்றான் நீராடிக் கடவுளைப் பூசித்து, நேசித்துத் தோத்திரஞ் செய்து, வழிபட்டு, வழுவாது ஒழுகுதற்கு விசேடமாயது. இதனாற்றான் சிவ சமய ஆலயங்களிற் பூசையாவும் பிராமிய முகூர்த்தத்திற் செய்யப்படும்.

இதர சமயவாதிகள் யாவரும் வியக்கத்தக்க மிக்க சுத்த பக்த சிகாமணியும், புத்த சமயத்தவரை வாதில் வென்று, சைவசமயத்தை ஸ்தாபித்த சிவஞானச் செல்வரும், சிவமெய்யடியருமாகிய ஸ்ரீமாணிக்கவாசக சுவாமிகள் பல தலங்களைத் தரிசித்தபின், திருவண்ணாமலைக்குச் சென்று, அங்கு அருணாசலேசுவரரைப் பாடித் தோத்திரஞ் செய்து, பூசித்து, அவ்வீசர் தமக்கு அருளும் பொருட்டுப் பரமாசாரிய மூர்த்தியாய் அநுக்கிரக வடிவங் கொண்டு எழுந்தருளி வந்தபொழுது, அவரை நேசமாய்த் தரிசித்து வணங்கி, அவருடைய திருவருளைப் பெற்று, அத்திருப்பதியில் வசிக்கு மக்காலத்திலே, மார்கழிமாதத்திலெல்லாம் சிவ அன்பான பெண்கள் அனைவருந் திருவாதிரைக்கு முற்படப் பத்துத் தினங்களுள்ள விடியற்காலங்களிலே வீடுகள்தோறுஞ் சென்று நின்று, ஒருவரை யொருவர் விழிக்கச்செய்து, கூட்டங் கூட்டமாய்ப் போய்ப்பாடி, நீராடிக் கடவுளைப் பூசித்தொழுகு வாராயினர். இவ்வாறு தம தாண்டவராகிய பரமசிவத்தைச் சிரத்தையாய் வழிபடும் அன்பர் தோத்திரஞ் செய்து கொண்டிருப்பதைக் கேட்டும், தேவர்கள் யாவரும் பூசிப்பதை யறிந்தும், "நங்காய்! இன்னமும் நீ எழுந்து நீராடவராது நித்திரை செய்யலாமா? உன் காது வலிய காதா? எழுந்திரு, அருணாசலத்தலத்தில் எழுந்தருளி யிருக்கும் பரமசிவத்தைத் தரிசிக்கலா"மென்று சொல்லி, எல்லாரும் ஸ்நானாதி நியமங்களை முடித்துக்கொண்டு, அக்கடவுளைத் திடமாய் வழிபட்டு, விரத மநுட்டித்து, பாடிவரும் மெய்யன்பைக் கண்டு, உள்ளத்திற் தெள்ளிதே ஆனந்தங் கொள்ள அவர்கள் பேசிக்கொண்டமைபோல், தாமும் பரம சிவத்தை "ஆதியு மந்தமு மில்லா அரும்பெருஞ்சோதி!" எனவாழ்த்தித் துதித்து, "திருவெம்பாவை" ஆதியாய் ஓதினர். அன்று தொடங்கி, என்றும் மார்கழி மாதத்திலே சிவாலயங்களிலே "திருவெம்பாவை" அன்பாய் ஓதப்படும் இதனை ஆதியிற் பாடியருளியவரான சுவாமிகளுக்கும், அவருக்கு அநுக்கிரகித்தவரான பரம சிவத்துக்கும் முறையே உற்சவம் நடத்தப்பட வேண்டியதென்றுங் கூறப்பட்டிருப்ப தென்பர் புலவர். மார்கழி மாதத்தில் ஸ்நான நியமங்களைப் பிராமிய முகூர்த்தத்திலேயே யாவரும் முடித்துக் கொண்டு சிவத்தை வழிபடுதல் மிக்க விசேடமாகும்.

திருவாதவூரர்புராணம் திருவம்பலச்சருக்கம்.

"அன்றுவந் தென்னை யாளு மணியண்ணா மலையாய், போற்றி, என்றுதம் பரிவா லேத்தி யிறைஞ்சியங் குறையு நாளில், ... ... ..."

"மாதர்கொண் மாதரெல்லா மார்கழித் திங்கள் தன்னில், ஆதிரை முன்னீரைந்தே யாகிய தினங்களெல்லாம், மேதகு மனைகள்தோறு மழைத்திருள் விடிவதான போதிவர் தம்மிற் கூடிப் புன்றறட மாடல் செய்வார்."

ஈசராகிய பரமசிவத்தை, இத்துணை அரும் பெருஞ் சிறப்புப் பொருந்திய மார்கழி மாதத்திலே, பிராமிய முகூர்த்தத்திலே, தேவர்களும் விழித்துப் பத்தியாய் வணங்கிப் பூசித்து, வேண்டிய வரங்களைப் பெறுவாராயினர். நாமும் அப்படித் தப்பாது எப்பொழுதும் முப்பொறியினாலுஞ் சிவத்தை வழிபட்டு, உய்ந்தீடேறலாகிய திருவருட் பயனை நித்தியமாய் அடைதல் அத்தியாவசியக மென்பது திண்ணமே. தன்னையே விஷயித்திருக்குங் கடவுளை வேண்டுங்காலத்து மந்திரத் தியானங்களாலெழுப்பி, உன்முகப்படுத்தி, நங்குறை முறைகளை வெளிப்படுத்துவதே காரியசித்திக்குப் புத்தியான விசேட வழியாம். ஆதலினாற்றான், மற்றைக் காலங்களினும் பார்க்கப் பூசாகாலம் பெரும்பான்மையாகக் கடவுட்டியானம், தரிசனை யாகிய இவைகட்கு விசேட மாயிற்று. அதினும், பூசை மந்திரங்களா லெழுப்பாது, ஈசர் தாமே எழுந்திருக்குங்காலமே, பிராமிய முகூர்த்தமாகிய திருப்பள்ளியெழுச்சி யாதலால், அக்காலத்திற் செய்யப்படுஞ் சிவவழிபாடே மிக்க விசேடமுடையதாய், விரைவாய்ச் சித்தி முத்திகளைத் தரத்தக்கதா யிருக்கின்றது. அன்றியும், பசுக்களாகிய நம்பொருட்டுத் திருவருட்கடலாகிய பரமசிவம், தம் அபேதவருட்சத்தியார் மாத்திரம் அறிய இயற்றும் பஞ்சகிருத்தியத்துட் படைத்தலால் மலபாகமும், காத்தலால் வினைப்பயானுபவமும், அழித்தலால் இளைப்பொழிதலும் மறைத்தலால் விழிப்பின்றி மயக்கம் போலாறியிருத்தலும், "பிறப்பென்னும் பேதமை நீங்கச், சிறப்பென்னுஞ் செம்பொருள் காண்பதறிவு" என்னும் உத்தரவேத வாக்கியப்படி அருளலால், உண்மைச் சிவஞான அறிவுவிளக்கி, முத்தி அநுக்கிரகத்தலுமாகிய பயன்களை முறையே ஆன்மாக்களான பசுவெல்லாமடைகின்றன. இது பற்றியே, முழுமுதற் கடவுளாகிய சிவம் இயற்றுங் கிருத்தியங்கள் தம் பயன் குறித்தனவன்றென்றும், பசுக்களாகிய நம்பயனே என்றுங் குறித்தனவென்றும் நன்றே சித்தாந்தமாயது. இப்பிரபஞ்ச கிருத்தியத்துள் திரோபவமாகிய விருள் நீங்கத் திருவருளாகிய சுவாநுபவப்பேறே "திருவெம்பாவை" என்பதாம். சத்திநிபாதம் பிறக்கும் பொருட்டு அம்பிகை, கணாம்பிகை, கௌரி, கங்கை, உமை, பராசத்தி, ஆதிசத்தி, ஞானசத்தி, கிரியாசத்தியாகிய நவ அருட்சத்திகளின் பிரேரகத்தால், சிவ திருச்சத்தியின் அருள்கொண்டே சிவானந்தப்பேறடைத லுண்மையின், அருட்சத்தியை வியந்ததே "திருவெம்பாவை" என்பதுமாம். இதனைத் திருவாசகத்திலும், சிவஞான சுவாமிகள் இயற்றிய உரையிலுங் காண்க. திருவெம்பாவைத் திருவிருத்தத் தோத்திரமே குறித்த விசேடத்தை உணர்த்தும். இன்னும், பஞ்சகிருத்தியங்களுக்கு முறையே காலை, உச்சி, மாலை; அர்த்தசாமம், உஷக்கால மிவை உரியனவாதலால், இக்காலங்களிலே பூசைகள், தரிசனைகள் செய்துய்யுமாறு கூறி விதிக்கப்பட்டமை அறிக. ஆகவே, அர்த்தசாமம் திரோதான நீக்கமும், உஷக்காலம் திருவருளுதித்தலுமாம். ஞானிகளும் இவற்றையே பெரும்பாலும் விரும்புவர். இவ்விருகாலமும் விசேடமெனத் திருவாதவூரடிகளுக்குக் காட்டியருளியதாலு முணரற்பாலது இந்நியாயங்களால், திருவெம்பாவைக் காலங்கடவுள் வழிபாட்டுக்கு விசேடமாய் உரியதாகும்.

உம்பரும் எம்பெருமானாகிய சிவத்தைப் பத்தியாய் வழிபட்டுப் பற்பல சித்திகளை அடையும் இம்மார்கழி மாதத்திலே நிகழும் புண்ணிய காலமாகிய பிராமிய முகூர்த்த மகத்துவங்களை அனைவரும் பின்வரும் விபத்தாலு மறிந்துணர்க. முற்கூறியபடி; ஆடிமுதல் மார்கழி வரையும் இரவும், தை முதல் ஆனிவரையும் பகலுமாய்த் தேவர்க்கொருநாளாம், சங்கார காலத்துக்கும், சிருட்டி காலத்துக்கும் பிரமாணமாக முறையே ஆறுமாதங்களும் பிரிவாய் நிகழுமென்பர். பிரபஞ்ச சிருட்டியைத் திருவுளத்திற்கொண்டு, வயிந்தவசத்தியைச் சிருட்டிக்க ஆரம்பிக்கும் அவசரந் திருப்பள்ளியெழுச்சி யெனவழங்கும்

என்றுங் கூறியிருக்கின்றனர். இனி, இச்சுத்த மாயை நாதவிந்துக்களாகவும், சாதாக்கியமாகவும, மகேசுரமாகவும் சுத்த வித்தையாகவுமைந்து தலங்களாயிருக்கும். நாத விந்துக்களாகிய தலங்களிலே பராசத்தியும் பரையும் அதிட்டிக்கும். சாதாக்கியமாய தலத்தின் கண்ணே சதாசிவ மூர்த்தி எழுந்தருளியிருப்பர். அநுபோகாங்கங்களாகிய அணுசதாசிவர் சேவிக்கவும், இதன் கீழே ஈசுரர்க் கதிட்டானமாகிய மகேசுர தலத்திலே அநந்தாதி அட்ட வித்தியேசுரர் சேவிக்கவும், இதன் கீழே உருத்திரர்க் கதிட்டானமான சுத்தவித்தியா தலத்திலே மந்திரேசுரர் சேவிக்கவும், இவ்வாறு பிரபஞ்ச அநுக்கிரக காரியமாகப் பராசத்தியிற் றோன்றிய ஞானக் கிரியைகள் அனைய மெஞ்ஞானத் திருவருள் சகல வுலகருக்கும் பாலிக்கும் விருப்பமே நித்திய திருமேனியாய்க் கொண்ட சதாசிவ மூர்த்தியானவர், தம்முடைய திருக் கிருபையால் அந்த மகேசுவர தத்துவத்திலே, சத்தி மண்டலத்திலிருந்த மனோன்மணி சத்தியைப் பிரேரிக்க, அந்தச்சத்தி சர்வ பூததமனியைச் சிருட்டிக்க, அந்தச் சர்வபூததமனி பலப்பிரமதமனியைப் பிரேரிக்க, அந்தச் சக்தி பலவிகரணியைப் பிரேரிக்க, அந்தச் சத்தி காளியைப் பிரேரிக்க, அந்தச் சத்தி இரவுத்திரியைப் பிரேரிக்க, அந்தக் சத்தி சேட்டையைப் பிரேரிக்க, அந்தச் சத்தி வாமையைப் பிரேரிக்க, இப்படி நவசத்திகள் பிரேரகத்தினால் மாயையை அதிட்டித்திருக்கும் அனந்த தேவராலே அசுத்த மாயை காரியப்பட்டுப் பிருதுவி முதலான பிரபஞ்ச காரியம் நிகழுமாறு அருளலே திருவெம்பாவைக் கருத்தென்றும் நன்கற திருவாசகப் பொழிப்புரையிற் கூறப்பட்டிருத்தல் கண்டுணர்க. மேலும், மார்கழித் திரு நட்சத்திரமாகிய திருவாதிரை உற்சவம் அல்லது நடேசர் ஆருத்திரா தரிசனம் என்பது பஞ்சகிருத்தியத்தைப் பற்றியதாம். இத்தரிசனத்துக்குப் பிராமிய முகூர்த்தமே விசேடமாக உரியதாம். நித்தியானந்தத் திருநிருத்தக் கருத்தராகிய சிவசபாநாதருக்கு வருடந்தோறும் சிதாகாசமான தில்லையில் ஆறு அபிஷேகங்கள் நடக்கும். இதற்குக் காரணம் சிவலிங்கப் பெருமானுக்கு நாடோறும் ஆறுகால பூசை புரியுமாறு ஆகமங்கள் கூறும். மேலெசொல்லிய ஆறுகால அபிஷேக பூசையும் முறையே தேவர்கள் ஒரு நாளிற் செய்யும் ஆறுகால பூசைக் கறிகுறியாம். திருவாதிரை, பரமசிவம் சகளீகரித்த தினமாதலின், விசேடமானதென இல்லற சாரசங்கிரகஞ் சொல்லுத லுணர்ந்தறிக. இந்த ஆருத்திரா தரிசனம் முறையே சிருட்டி, திதி, சங்காரம், திரோபவம், அநுக்கிரகம் எனும் பஞ்சகிருத்தியத்தைக் குறிக்கு மென்பதற்கு விபரம்: அஃதெவ்வாறெனின், சர்வான்மாக்களுக்கும் அநுக்கிரகிக்குமாறு சிதம்பர சித்க்ஷேத்திரத்திலே எழுந்தருளியிருக்கும் நடராஜப்பெருமான் சிற்சபையை விட்டு எழுந்தருளுவது சிருட்டி; இரட்சாபந்தனந் தரிப்பது திதி; கிருஷ்ண கந்தந் தரிப்பது சங்காரம்; வெள்ளை சாத்துவது திரோபவம்; உற்சவங்கொண்டருளுவது முதலியன அநுக்கிரகம் எனவுணர்க. அகங்கரித்த அசுரரைப் பரமபதி தாமே சங்கரித்த பொழுது, அவர்களுடைய சரீரங் கரிய பஸ்பமானதால், அதைத் திலகமாக்கித் தரித்துக் கொண்ட பாவனையாகக் கிருஷ்ணகந்தஞ் சாத்துவது; அச்சங்கார காலத்தில், திருமேனி அதிக உஷ்ணமா யிருந்தமையால், அது தணியும் பொருட்டுத் தேவர்கள் அத் திருமேனியை வெள்ளை வஸ்திரத்தினாலும், வெள்ளைப் புட்பங்களினாலும் பூசித்து மூடினார்கள். அதற் கறிகுறியாகவே வெள்ளை சாத்துவதாம். பரமசிவமாகிய சபாநாதருக்கு வருடந்தோறும் சிதம்பரத்திலே ஆறு அபிஷேக பூசைகள் நடக்குமென்பதற்குப் பிரமாணம்:—

"சித்திரையி லோண மூதற்சிராணி யுத்திரமாஞ்
சத்ததனு வாதிரையுஞ் சார்வாகும்—பத்திவளர்
மாசிபரி கன்னி மருவு சதுர்த்தசிமன்
றீசரபி ஷேக தினமாம்."

ஊனக்கண்ணை யுடையவர்களினும், ஞானக் கண்ணை யுடைய மெய்த்தவ சிரேட்டரே பரம சிவபிரானுடைய திருவருட் கிருத்தியங்களின் மெய்ஞ்ஞானக் கருத்தை நன்கறிவர். பிராமிய முகூர்த்தத்தில் ஈசனைப் பூசித்தால் விசேடமெனப் பெரியோராகிய ஞானிகளும் கூறியிருக்கின்றனர். மார்கழி மாசத்திலே விரதத்தை யனுட்டித்தவர்கள் சகலநன்மைகளையும்பெற்று, முத்தி சித்தி அடைந்தனரென புராணங்கள் கூறும், பிரதானமாய் விரதமநுட்டிப்பது, தம்

மனம் பொறி நெறிவழுவி ஒழுகாது தெற்றென முற்றும் நிற்றற் பொருட்டே. விருப்புடன் உணவை நிறுத்தியேனும், ஒறுத்தேனும், மனம் வாக்குக் காயமெனும் மூன்றினாலும் எப்பொழுதும் பரமபதியாகிய சிவத்தை நூல்களிற் சொல்லியபடி தாம உயர்ந்திடேறுமாறு மெய்யன்போடு நேசித்துப் பூசித்து யாண்டும் வழிப்பட்டு ஒழுகல் வேண்டும். இவ்வாறு செய்து விரதம் அநுட்டிப்பவரே இஷ்டசித்திகளையும், நற்கதிகளையுந் தடையின்றி என்றும் நன்றே அடைவர்.

இந்துசாதனம்.

## The Eternal Dance or the Lord's Play.

### SOME SCENES FROM REAL LIFE.

### "Arbitration : Pretence and Reality."

"In the year 1708 Prince Eugene of Savoy was beseiging the City of Lille, which was defended by the gallant French Commander Marshall de Buoflers. After much fighting, in which deeds of signal valour were performed by both sides, the situation grew so hopless to the defenders that the Marshal offered to capitulate. Thereupon, Prince Eugene, a general who was always as magnanimous in victory as he was terrible in the field of battle, wrote to the Marshal congratulating him upon the way in which he had defended the place intrusted to him, and continued:— "I wish to mark the esteem in which I hold you by requesting you yourself to draw up the articles of surrender according as you judge them proper, assuring you that I shall change nothing, *save in the case that something put in on! is contrary to my honour and my duty*; which however I know I need not fear that you will do."

Marshal de Bereflers accordingly drew up the article of capitulation as requested paying scrupulous heed that nothing should be put in that might seem contrary to Eugene's sense of what was due from the standpoint of honour and duty to the German Empire which he served; and Eugene changed nothing in the articles submitted to him abiding by every one, although as regards one the officers under him begged to repudiate it. . . . . . .

. . . . . By reserving to himself the right to refuse to do anything inconsistent with honour and duty, by promising, therefore, nothing save what he could perform and yet promising everything he could perform, and then making his promise good, Prince Engene rendered a service to humanity and in especial, by his deed in making good his words, he advanced the standard of civilised conduct among enemies. . . . .

. . . . On these two questions of duty and honour, the nation, if true to itself, can never be guided by any outside body, and can pay heed only to its own conscience and its own sense of right ; to fail thus to be guided would mean that it was recreant to its duty not only to itself, but to the world at large."—*Ex-President Roosevelt in the 'Outlook.'*

### "கோபாலகிருஷ்ணன் கூத்து."

"மாயாவழக்கு."

"கூத்துப்பார்க்க வாரும் சுதரே
கோபாலகிருஷ்ணன் கூத்துப்பார்க்க வாரும்!"

### Scene 1—முதற்காட்சி.

மத்யஸ்தானலீலை வழக்கை விசாரிக்குமுன் லாபநஷ்ட சம்பந்தமான தாவா எதையும் நாங்கள் விசாரிக்க மாட்டோம் என்றுக்ஷேபித்தாள். லாபநஷ்ட சம்பந்தமில்லாத வழக்கில்லையே யென்றதற்கு டேக்ருங்கரணே யென்ற தர்க்கவாதி கன்னம் வைத்த கள்வன் சுவற்றைத் துளைத்ததால் வீட்டுக்குண்டான நஷ்டத்துக்கும் அவன் கைவலிக்கக் கன்னம் வைத்ததனால் அவன் கைவலித்துப் பறத்துப் போனதற்காகக்கோரும் நஷ்டத்திற்கும் சரியாகப் போய்விட்டது என்று புதுமையான வொரு தர்க்கநியாயமெடுத்துச் சொன்னார். ஸத்யம் அந்தநியாயத்தை ஒப்புக் கொள்ளாதது கண்டு மத்திபஸ்தானலீலை அதுவெல்லாம் விசாரிக்க முடியாது என்று சுருக்கமாகச் சில தாவாக்களை மட்டும் குறித்துக் கொண்டாள். அவை:— பின் வருமாறு:—

(1) ஸத்யத்தின் சொத்து அஸத்யத்தினிடத்தில் எவ்வளவு இருக்கிறது? எறத்தாழ விருந்தால் அதற்கு வழி யென்ன சொல்கிறது?

(2) கன்னக்கோல் மழுங்கின கூலி யார் கொடுக்க வேண்டியது?

( ) கன்னக்கோல் மழுங்கினதற்குக் காரணம் சுவற்றின் குற்றமா? அல்லது கன்னக்கோலின் குற்றமா?

இந்த மூன்று தாவாக்களைமட்டும் விசாரித்து தீர்ப்புச் சொல்வோமென்றாள் ஸத்யாஸத்யரூப மத்யஸ்தான லீலையாம் ஜட்ஜி.

அஸத்யவாதி.—கன்னம் வைத்த கூலி எனக்குச் சேரவேண்டுமே யதற்கு என்ன சொல்கிறீர்கள் என்று கேட்டார்.

ஸத்யவாதி.—எனக்கு ஸொத்து நஷ்டமானது மல்லாமல் வீடும் இடிந்துபோயிற்றே! அதற்கு கேள்விமுறை யில்லையா? என்றார்.

டேக்ருங்கரணே தர்க்கவாதி:—வீட்டைத் துளைத்த நஷ்டத்துக்கும் கன்னம் வைத்தகூலிக்கும் ஈடு சரியாகப் போய்விட்டது என்றார்.

*266-வது பக்கத்தில் "திருக்கூத்துதரிசனம்" பார்க்க

ஸத்தியவாதி.—"கள்ளன் வந்த வீட்டுக்கு எண்ணெய்ச் செலவு" என்று போதாதா? களவாணிக்குக் கன்னக்கூலி கிடைக்கவும் நியாயமுண்டா?

ஸத்யாஸத்யமத்யஸ்தானலீலே:—அந்தத் தாவாவே வேண்டாம்.

அஸத்யவாதி:—சரி, ஆனால் சரி, இதுவே போதும்.

ஸத்யவாதி:—(தனியனாய்) இதுவும் ஒரு நியாயமா? வல்லான் வகுத்தது வழக்காயிருக்கிறதே! அதர்ப்ம வாழ்வு ஆபத்துக்கிடமாமென்றுணர வில்லையே!

மத்யஸ்தானலீலே:—ஸத்யத்தின், சொத்து அஸத்யத்தினிடத்தில் எவ்வளவு இருக்கிறது?

அஸத்யவாதி:—அதைப்பற்றி இப்பொழுது ஒன்றும் சொல்ல முடியாது. இரண்டாவது தாவாவை யெடுத்துக் கொண்டு விசாரியுங்கள்.

மத்யஸ்தானலீலே:—கன்னக்கோல் மழுங்கின தீட்டுக்கூலி யார்கொடுக்க வேண்டியது? என்பது இரண்டாவது தாவா.

அஸத்தியவாதி:—இதோ நான் கன்னக்கோல் தீட்டினதற்கான கணக்கு இருக்கிறது, பாருங்கள்!

ஸத்யவாதி:—அது யார் வீட்டில் கன்னம் வைக்கிறதற்காகத் தீட்டப்பட்டதோ தெரியாது. களவு கொடுத்தவன் கன்னக்கோல் தீட்டுக் கூலியும் கொடுக்க வேண்டுமென்கிற நியாயமிருக்கிறதாக வைத்துக்கொண்டாலும், அந்தக் கணக்கில் என் வீட்டில் கன்னம் வைக்கிறதற்காகத்தான் கன்னக்கோல் தீட்டினதாகக் காட்ட ருஜூ வொன்று மேற்பட வில்லையே.

அஸத்தியவாதி:—அனந்த சாக்ஷியாக இவர் வீட்டில் கன்னம் வைக்கத்தான் தீட்டப்பட்டது என்று சொல்கிறேன்.

ஸத்தியவாதி.—"அனந்த சாக்ஷியாக" வென்றால் எனக்கு அர்த்தம் புரியவில்லை: "ஸர்வ ஸாக்ஷி" எல்லாவற்றிற்கும் சாக்ஷியாயிருக்க, உண்மைநிலைதவறி ஒரு தலைச்சார்பாக வழக்குரைப்பார்க்கு உடந்தையாயிருந்து சாக்ஷி சொல்லுமா? இந்த அதிசயம் எங்கேயாவது கண்டது கேட்டதுண்டா?

அஸத்யவாதி:—"நாளைக்கு வந்து சாக்ஷி சொல்ல வைக்கிறேன்."

மத்யஸ்தானலீலே:—"அதை நாளைக்கு ருஜூப்படுத்துகிறேன்" என்கிறார். அது உம்வீட்டில் தான் கன்னக்கோல் வைக்கத் தீட்டப்பட்டது என்று ஏற்பட்டால், அப்புறம் அதற்கு நீர் என்ன ஜவாப்பு சொல்கிறீர்?

ஸத்யவாதி:—அது ருஜூவானல் அதற்கு ஜவாப்பு தானே பிறக்கிறது.

மத்யஸ்தானலீலே:—உம்மிடத்தில் ருஜூ ஏதாவதிருக்கிறதா?

ஸத்யவாதி:—அஸத்யம் பக்காத் திருடனாதலால் பல வீட்டில் கன்னம் வைப்பவன். இவனை நம்பப் படாதென்பதற்கு ருஜூவிருக்கிறது.

மத்யஸ்தானர்:—எங்கே! அதை யெடும்! பார்ப்போம்!

ஸத்தியவாதி:—இதோ! 'அஸத்யம்' செய்திருக்கிற திருட்டுத் தனத்தைப் பாருங்கள்!

அஸத்யவாதி:—அதுவே இவன் வீட்டில் நான் கன்னம் வைத்ததற்கு சாக்ஷி.

ஸத்யவாதி:—எப்படி?

அஸத்யவாதி:—இது இதற்குமுன் களவு செய்தபோது வைத்த கன்னவாசல். முன் இது வட்டமாயிருந்தது. அதை இடித்துக் கட்டியிருக்கிறது. மோசம்! மோசம்!! வெகு மோசம்!!!

மத்யஸ்தானலீலே:—(விழித்துக்கொண்டு) மோசமா! என்ன மோசம்?

அஸத்யவாதி:—நாளைக்கு நான் அந்த மோசத்தைக் காட்டுகிறேன். விருத்தாகாரமான கன்னவாசலை யிடித்துச் சதுரமாக மாற்றிச் சுவரில் ஒட்டுப் போட்டிருக்கிறது பாருங்கள்! இது கன்னக்கோல் அளவு பொருந்தாம லிருக்கிறதற்காகச் செய்திருக்கும் தந்திரம்.

மத்யஸ்தானலீலே:—ஓய் 'டுக்ருங்கரணே!' ஸத்யவாதி இதற்கு என்ன ஜவாப்பு சொல்கிறார்? கேளும்!

ஸத்யவாதி.—நாளைக்கு கன்னக்கோல் அளவும், அனந்த சாக்ஷியும் சேர்ந்து ருஜூவான பின் நான் சொல்கிறேன்.

மத்யஸ்தானலீலே:—விசாரணை நாளைக்கு ஒத்திவைக்கப் பட்டிருக்கிறது.

ஸத்யம்.—(தன்னந்தனியே) குருதிசை குருபுத்தியில் குருசாரம் இப்படிக் கழிந்தது! நாளைக்கு சுக்கிரனது கிரகசாரம்! ஒற்றைக் கண்ணன் என்னகூத்து இழைப்பனே பார்ப்போம்!

## Scene II—இரண்டாங் காட்சி.

[மத்யஸ்தானலீலே, ஸத்யவாதி, அஸத்யவாதி, டுக்ருஞ்கரணே தர்க்கவாதி, எல்லாரும் வந்துசேர்ந்து விட்டார்கள். விசாரணை யாரம்பம்.]

மத்யஸ்தானலீலே:—அஸத்யவாதி தன் கக்ஷியைருஜுப்படுத்த வேண்டியது.

அஸத்தியவாதி:—ஆகா! இதோ! என் கணக்குபிணக்குகளெல்லாமிருக்கிறது! "கதைக்குக் காலில்லை" யென்பார்கள் என்கணக்குக்கும் காலில்லை. கதையை யெல்லாம் நம்புகிறார்கள். ஆகையால் என் கணக்கையும் எல்லாரும் நம்ப வேண்டும்.

ஸத்யவாதி:—(தனியனாக) உன் கணக்குக்குக் காலில்லை. மத்யஸ்தம் செய்ய வந்தவர்களுக்கு மனக் கண்ணில்லை. (பெருமூச்சுவிட்டுப் பின் வாய்திறந்து சொல்கிறார்) "ஸத்யமேவ ஜயதே நாந்ருதம்."

மத்யஸ்தானலீலே:-எங்கேயெடும் பார்ப்போம்!

அஸத்தியவாதி:—இதற்கு முன் ஸத்யநின் வீட்டில் கொள்ளையிட்டபோது உபயோகித்த கன்னக்கோல் தீட்டின கணக்கு இதோ இருக்கிறது.

ஸத்தியவாதி—அந்தக் கணக்குக்கும் ஸத்யத்துக்கும் என்ன ஸம்பந்த மிருக்கிறதென்று தெரியவில்லையே!

அஸத்யவாதி:—இராமனுணை! நான்தான் திருடினேன். இவன் வீட்டில் தான் கன்னம் வைத்தேன்.

ஸத்யவாதி:—அஸத்யவாதி திருடன் என்கிற மட்டும் ஒப்புக்கொள்கிறேன். அந்தக் கன்னக்கோல் இவன் கையாடினது என்பதற்கு ருஜுவொன்று மில்லையே! மார்ஜ்ஜல ராமனுக்குப் பால் வெண்ணெய் திருடத்தெரியுமென்று எனக்குத் தெரியும். அவன் தொழிலுக்கு கன்னக்கோல் வேண்டாம். ஆகையால் எனக்கு அவன் பேரில் சமுசயமுமில்லை. ஆனால் அவன் அப்பாவி! கிருஷ்ணன் ஜகப்புரட்டன் அவனை

அஸத்யவாதி:—(குறுக்கிட்டு) "இராமனானலென்ன? கிருஷ்ணனானலென்ன? எல்லாம் நானேயாக விருக்கிறேன் '(அஹம் ப்ரஸ்மி' சுருதி வாக்.) இராமன் அப்பாவிதான்! கிருஷ்ணன் மாயாவி தான்! இராமன் அப்பா சொல்லைக் காப்பாற்ற வேண்டிக் காட்டுக்குப் போனன். கிருஷ்ணன் யதோதநன்; எல்லா ஜாலமும் அவனுக்குத் தெரியும். கிருஷ்ணனுக்கு முன்னை இராமன் வாலாட்ட முடியுமா! "சும்மாவிருப்பாரா மே!' யென்றால், இருந்தவிடம் விட்டுப் பெயாமல் அப்படியே நின்றுகொண்டு இருக்கவேண்டியது தானே!

ஸ்த்யவாதி:—இராமனை அவ்வளவு எளிதாக நினைத்துவிடக் கூடாது. இராமனுக்கு வாலில்லா விட்டாலும் இராமபக்தனான ஹனுமானுக்கு வாலிருக்கிறது. அவனுடைய பலம் யாருக்குவரும்! ஆளறியாமல் பேசிவிடக் கூடாது! அஸத்தியவாதி சொல்கிற பேர்வழி வேறு. அந்த ஆளை யெனக்கு நேரில் தெரியும். அவன் பொய்சொன்னாலும் பொருந்தச் சொல்லுவன். எல்லாரும் அவன் பொய்யை மெய்யென்றே நம்பிச் சந்தோஷிப்பார்கள். அவனிடத்தில் புருஷத்துவமுண்டு. ஆதலால் அவன் புருஷோத்தமன். ஜகப்புரட்டனானாலும் அகக்கட்டில் அகப்படுவான். ஆகையால் அவன் ஜகத்ரக்ஷகனே. இவன் கட்டுக்கடங்காப் பேர்வழி. சொல்வதெல்லாம் பொய்! அந்தப் பொய்யிலும் இரவல்பொய் சொல்கிறவன. பொய்யிலும் கைம்முதலில்லாமல் கடன் வியாபாரம் செய்கிறவன். கடன் வியாபாரம் ஒருபோதும் உருப்படுவதில்லை. நான் இவனை நம்பமாட்டேன். இவன் அயோக்கியன். நம்பிக்கைக்குப் பாத்திரனில்லை.

அஸத்யவாதி:—நானு அயோக்கியன்! என் சமர்த்தைக் காட்டுகிறேன் பார்! இவன் மோசக்காரன்! ஸத்யவாதி யென்று வெளியேறி விட்டான். முழுமோசக்காரன் என்று காட்டுகிறேன் இதோ! "நாரதா கலகப்பிரயா:" என்கிற வசனம்கேட்டதில்லையா? நாரதருக்குக் குறுக்கே பிறந்தவன் இந்த ஸத்யவாதி! பொல்லாத பேர்வழி. பிடிவாதக் காரன். சண்டைப்பிடி யுள்ளவன். சாதனைக்காரன். இவன் வேதனை பொறுக்க முடியாது! இவன் செய்தி தெரியாமல் இவனிடம் அகப்பட்டுக்கொண்டு விட்டேன்!

மத்யஸ்தானலீலே:—இதெல்லாம் பேச்சை வளர்ப்பதாயிருக்கிறது! உமது கக்ஷியை ஸ்தாபித்துப் பேசும்.

அஸத்தியவாதி:—எனது கக்ஷியா! என் கக்ஷி இவன் கலகக்காரன் என்பதே. பெருமோசம் செய்துவிட்டான்!

மத்யஸ்தான லீலை:—அது எப்படி? ருஜுப் படுத்தும்!

அஸத்தியவாதி:—இதோ பாருங்கள் இந்தக் கன்னக்கோல் அளவும் அந்தக் கன்னவாசல் அளவும் பொருந்தி யிருக்கிறது!

மத்யஸ்தான லீலை:—இல்லையே! உமது கன்னக்கோல் விருத்தாகாரமாகத் துளைப்பதா யிருக்கிறது! அவர் வீட்டுக் கன்னவாசல் சதுரங்கமா யிருக்கிறது! பொருத்தம் எங்கே?

அஸத்தியவாதி:—கன்னவாசலை யிடித்துக் கட்டியிருக்கிறான். இதோ நான் இடித்துப் போட்ட கல்லைவிட ஜாஸ்தி செங்கல் விழுந்து கிடந்த இடம் தெரிகிறது பாருங்கள்!

ஸத்தியவாதி:—கன்னவாசலை யிடித்த குற்றம் நான் செய்யவில்லை. கன்னவாசலை யடைத்தது குற்றமாகாது! இவன் "கன்னக்கூலி வேண்டாம், போனாற் போகிறது!" என்று சொல்லி "கன்னக்கோல் மழுங்கின தீட்டுக் கூலிக்கு"த் தாவா கொண்டு வருவானென்று எனக்குத் தெரியாது. இவன் சொல்வது "கழுவுக்கேற்ற கோமுட்டி நியாயமா" யிருக்கிறதே!

டேக்ருங்கரணே தர்க்கவாதி:—ஸத்தியவாதி! நான் சொல்வதைக் கேளும். இந்தக் கயிற்றுச் சுருக்கை உமது கழுத்தில் மாட்டிக்கொள்ளும்! நான் உமக்கு நன்மையையே சொல்கிறேன். கழுத்தில் சுருக்கிட்டுக் கொள்ளும்! சீக்கிரம்! சீக்கிரம்!! நான் சொன்னால் கேட்மாட்டேன் என்கிறீரே! நான் உமக்கு ஹிதத்தையே சொல்கிறேன், கேளும்! கேளும்!! சொன்னேன் கேளும்!

ஸத்தியவாதி:—ஐயா! என் ஸ்வபுத்தியைக் கொண்டு நான் பிழைக்கிறேன். இரவல் புத்தியைக் கொண்டு பிழைக்க வேண்டாம். கழுத்தில் சுருக்கை மாட்டிக் கொண்டால் நீங்கள் எல்லாரும் சேர்ந்து இழுக்கும்போது சுருக்கு நெருங்கி நான் திக்குமுக்காடிச் சாகவேண்டியதுதான். கோழிக் குஞ்சைக் கழுத் தொடிப்பதுபோல் என் கழுத்தைக் கொடுத்துவிட்டு நிற்க எனக்கிஷ்டமில்லை. உள்ளதுக்கு விரோதமாக எனக் கிஷ்டமில்லாத காரியத்தை நீர் சொன்னாலும் யார்சொன்னாலும் கேட்கமாட்டேன். என் உயிரை வாங்கவேண்டு மென்கிற அபிப்பிராய மிருந்தால் உண்மையாக வேண்டுமென்று கேளும். நானாகப் பிராணத்தியாகம் செய்து உயிரைத் தத்தம்செய்து கொடுக்கிறேன். கோழிக்குஞ்சு பலியிடுவது போல், என்னை நீங்கள் அஸத்யத்துக்குப் பலியிட நான் சம்மதிக்க மாட்டேன்.

அசரீரிவாக்:—"ஸத்யமேவ ஜயதே நாந்ருதம்!"

மத்யஸ்தான லீலை:—ஓய் டேங்கரணே, அவர் கழுத்தைக் காட்டுகிறாரா இல்லையா? கேளும்!

டேக்ருங்கரணே தர்க்கவாதி:—பார்த்தீரா, மத்யஸ்தானர் கேட்கிறார்! கழுத்தைக் காட்டும், கழுத்தைக் காட்டும்! கொஞ்சம் தலைகுனியும், நானே சுருக்கை மாட்டிவிடுகிறேன்!

ஸத்தியவாதி:—மூடமதே, தவளைபோல் சத்த வேண்டாம். விருத்தாசுரன்வாயில் அகப்பட்டு பாம்பின்வாய்த் தவளைபோல் தவிக்கும்போது தெரியவரும்; மத்தியஸ்தானர்களே நான் சொல்லவேண்டியதைச் சொல்லிவிட்டேன். எனக்கு இஷ்டமில்லாத காரியத்தில் நான் தலையிட்டுக் கொள்ளமாட்டேன்.

டேக்ருங்கரணே தர்க்கவாதி:—உமக்கு இஷ்டமில்லாவிட்டாலும் எனக்காகவாவது செய்யும்! உமக்கு நல்லதையே சொல்கிறேன் நான்! என் தொழிலைக் கெடுக்காதேயும்!

ஸத்யம்:—என் கழுத்தில் சுருக்கிட்டுக்கொண்டு விட்டுப்பின்னர் தங்களுடைய தயவைக்கொண்டு நான் பிழைக்கவேண்டாம்! நான் உள்ளதுள்ளபடி நிற்கிறேன்! உமக் கிஷ்டமானால் தாவிக் குதித்து என் தலையில் சுருக்கை மாட்டும்! அப்பொழுது பார்த்துக் கொள்ளலாம். நான் அஸத்யத்துக்குச் சட்டுப்படமாட்டேன். உங்களிடத்தில் கழுத்தைக் கொடுத்துவிட்டு அஸ்தயத்துக்குச் சட்டுப்படுவதைவிட, என் தலைபோகிறதா யிருந்தாலும் தோளின்மேல் கழுத்திருக்கத்தானே நான் தலைகொடுக்கிறேன்.

மத்யஸ்தான லீலை:—இப்பொழுது ஸத்யவாதி, கழுத்தைக் கொடுக்கிறாரா இல்லையா? கேளும்!

டேக்ருங்கரணே தர்க்கவாதி:—மத்யஸ்தானர் கேட்கிறார்! அதற்கு என்ன சொல்கிறீர்?

ஸத்தியவாதி:—இதோ என் தலையை அரிந்து தங்கள் முன் வைக்கிறேன். வேண்டி யிருந்தால் எடுத்துக் கொள்ளுங்கள்! எனக்கு உங்களிடத்தில் கழுத்தைக் கொடுத்துவிட்டு நீங்களிழுக்க நானிழுக்க மல்லுக்கு நிற்க இஷ்டமில்லை!

மத்யஸ்தான லீலை:—உமது தலையை அரிந்து கொடுக்கக்கூடாது! தலையை யெடுத்துக் கழுத்

தில் வைத்துக்கொண்டு சுருக்கை மாட்டிக் கொண்டால் மாட்டிக்கொள்ளும்! இல்லாவிட்டால் உமது தலை வேண்டியதில்லை! எடுத்துக் கொண்டுபோம்!

ஸத்தியவாதி:—தங்கள் இஷ்டம் என்பாக்கியம்!

டேக்ருங்கரணே தர்க்கவாதி:—ஸத்யமே! என் பேச்சைக்கேளும்! வீணாகக் கெட்டுப் போகாதே!

ஸத்யவாதி:—ஸத்யம் கெட்டு வாழ்கிற வாழ்வு எனக்கு வேண்டாம். ஸ்த்யத்தோடு நானு மழிந்து போகிறேன். பிற்பாடு எல்லாரும் "பாழும் ஊருக்கு நரி ராஜா' என்பதுபோல ஏக போகமாய் வாழலாம். அப்படியே வாழுங்கள்! பகவதி! என்னைக் காப்பாற்ற!

அசரீரிவாக்கு:—ஸத்யமேவ ஜயதே நாந்ருதம்!
அபயம்! அபயம்! அபயம்!
அஞ்சேல், அஞ்சேல், அய்யனே
நெஞ்சில் வஞ்சம் நினையாய்
அஞ்சில் மூன்றில் அறிவை நிறுத்தி
துஞ்சுநற் பாம்பைத் தூக்கி யெழுப்பிப்
பஞ்ச பூதங்களைப் பண்பா யொடுக்குநீ!

ஸத்யவாதி:—ஐயகோ! அம்மணி!

"வெண்துயிலுடுத்தநீ
வன்துயில்போக்கியும்
என்துயராற்றுதேவுதலென்ன ஓ!
மன்னுயிர்வதையைநின்
பொன்னுயிர்வாடப்
பொறுக்கலாற்றாதுதவிக்கிறேன் தாயே!
(அடக்க முடியாமல்! அழுகிறார்).

அசரீரிவாக்கு:—அபயம்! அபயம்! அஞ்சேல், துஞ்சேல், எஞ்சிவரினு நீ மிஞ்சேல், மிஞ்சேல்!

ஸத்யவாதி:—ஆ! நானுன் சிறு பாலன்!

"என்னென்னசெய்கினுநீ யேதேதியற்றிடினு
முன்பிள்ளையுன்னடிமை யுனக்கே நானர்ப் பணங்காண்!"

அஸத்யவாதி:—அழு! அழு! உன்னழுகைக் கார் இரங்கப் போகிறார்கள் இங்கே! வேணும்! வேணும்! நன்றாக வேணும்!

டேக்ருங்கரணே தர்க்கவாதி:—நான் தான் சொன்னேனே, "என் வார்த்தையைக் கேளும்!" என்று; நல்லத்தைச் சொன்னால் கேட்க மாட்டேனென்கிறீரே. இந்தச் சுருக்கைக் கழுத்தில் மாலையாகப் போட்டுக் கொள்ளும்! மணிக்கயிறு! மூடிச்சு முடிச்சாயிருக்கிறது! ஜபமாலையாட்டமாக அழகா யிருக்கும்!

ஸத்யவாதி:—ஹே! மூடமதே! என்னைத் தொல்லை செய்யாதே! உன் மிருட்ட லுருட்டலுக்கஞ்சி யான் அழுவில்லை. என்னை யுன் மூடமதியால் மயக்காதே! உனக்கு உண்மை தெரியாது! "என் வீடு சுடுகாடானாற் போல் எல்லார்வீடும் சுடுகாடானால் அப்போதுண்மை தெரியவரும்" என்கிறாள் ஸாவித்திரி. அவள் பேச்சைக்கேட்டுப் பிழைக்கலாமானாற் பிழை! இல்லாவிட்டால் நீ உன்னிஷ்டம்போல் செய்! என் உள்ளகம்நோவெடுக்க என்னை வதைக்காதே! வீணாக என் பாபத்தைக் கொட்டிக் கொள்ளாதே.

டேக்ருங்கரணே தர்க்கவாதி:—நான் சொல்வதைக் கேட்காமல் தானே பேசுகிறீரே! நான் சொல்வதைக் கேளும்!

அஸத்யவாதி:—வேணும்! வேணும்! நன்றாக வேணும்! திண்டாடு! நன்றாகத் திண்டாடு!

ஸத்யவாதி:—நான் திண்டாடாமல்தானே என் தாய் என்னைக் காப்பாற்றி முச்சந்தியில் விட்டு விட்டாள். திண்டாட்டமெல்லாமுனக்குத் தானிருக்கிறது. குதிரைவண்டி மயக்க முனக்குத் தலை தெரியவில்லை. அசுவாரூடை ஆணை! குதிரை படுத்தாலுனக்குக் கொட்ட மடங்கிப்போம்! பொறு! பொறு!

அசரீரிவாக்கு:—ஸத்யமேவஜயதே நாந்ருதம்!

டேக்ருங்கரணே தர்க்கவாதி:—ஸத்யத்தை இங்கே யார் கண்டார்கள்! 'கேஸ்' நடக்கிறபோது என்ன உளறுகிறீர்! வாய் மூடும்.

ஸத்யம்:—(தன்னந் தனிமையாய்) "காக்காய் பிடிக்கிற தந்திரம் கருடனிடத்தில் சாயாது!" (மௌனத்திலாழ்ந்து பாடுகிற பண்):—

"குண்டலக்காதிகொலைவிற்புருவத்தள்
கொண்டவாத்தினில்மன்னுகோலத்தள்
கண்டிகையாரம்கதிர்முடிமாமதிச்
சண்டிகைசாற்றிசைதாங்கிநின்றாளே
எண்டிசைபத்துமேகமாய்நின்றனள்."

"ஆதியநாதியகாரணகாரணி
சோதியசோதிசுகபரசுந்தரி
மாதுசமாதிமனோன்மனிமங்கலி
யோதியென்னுள்ளத்துடனிருந்தம்பா
வீதியிலென்னைவிடத்துணிந்தாளே."

அஸத்யவாதி:—நில்லு சந்தியிலே, நில்லு.

மத்யஸ்தானர்:-அஸத்யமேவாய்மூடுபோதும்!

அஸத்யவாதி:—நிற்கட்டுமே சந்தியில்—

டேக்ருங்கரணே தர்க்கவாதி:—(குறுக்கிட்டு) உன் ஊத்தை வாயைத்திறவாதேயும் போதும்! வாய் மூடு! பேசாதே!

குமருகுருபர ஸத்யாநந்த அவதூதாத்மாநம்பஜே.

357

(1901-1912.)

Ananda Mission Founder's Day.
The Twelth Arudra Celebration.

AUM.

Our Motto:
"Hitch your wagon to a Star" and
"Let the Current that knows its way."

"Our Theism is the purification of the Human Mind." Our Method: "Satyam Vada!"-Dharmam Chara!"

# THE TRUTH BEHIND THE CORONATION DURBAR.

"The Kingdom of the World is become the Kingdom of our Lord and of His Christ."

## "THE MISSION OF THE EMPIRE AND THE WORLD."

"Here then lies the work of our Empire in the coming years" and of
THE ANANDA MISSION WHICH AIMS AT REALISING THE PERMANENT VALUE
Of Any Empire or Any Social Institution by making real and effective in the World

## "THE IDEAL OF BROTHERHOOD" OR "CHRISTLY LOVE"

—*The Paramkarunai which feeds on and grows Perfect by "Neighbourly Love" or Jeevakaruniam.*—

"LET US NOT FORGET"

**"That the achievement of this great end does not lie merely with statesmen and politicians,**
**"but Far More with the Ordinary People in the Ordinary Routine of Daily Life."**

" Life is real, Life is earnest;
And the grave is not its goal."

IT was a splendid service which the Bishop of Madras rendered to the cause of truth and the coming of the Kingdom of God, in the impressive sermon, whigh he preached to the world from the Coronation Durbar Camp on Sunday last. (10th Dec.) The Truth behind the Coronation Durbar is that "the Kingdom of the World is become the Kingdom of Our Lord and of His Christ." The Lord Bishop said that he spoke only as the representative of the Christian Community in India, but every community and every religion will admit the Truth behind the Coronation Durbar in the text which he took up for his sermon. Only they will not consent to limit the full spiritual meaning of the expressions used by any narrow interpretation of sect or creed. "The vast responsibility of Empire" rests not on the shoulders of the King alone, but on all who are subjects and citizens of the State and so form the body-politic of the Empire of which the King is the symbolical head as the devine representative of Godly Power on earth.

"Among men I am the King," said the Lord Sri Krishna to Arjuna, and the accepted Ideal of Kingship as propounded by our *Dharmasastras* is the same as the Lord Bishop of Madras so well and happily expressed in the beautiful sermon which He preached from his place in the Coronation Durbar Camp. "Rajah" means one who pleases all entrusted, to his care.

"The history of the world is the gradual fulfilment, even through the working of human passions and ambitions, of God's Eternal Will. Whatever is out of harmony with that Will comes to nought. Whatever opposes it is swept away." "The Kingdom of the World" must *ever remain* "the Kingdom of the Lord" and of His Son, the anointed of the Lord and the Saviour of men. I use Christ in the fullest significance of the word as "the Son of God and the Saviour of men"—*the Kumara Guru*—"the Son and Saviour" with whom every Hindu is only too familiar.

The Bishop of Madras has lifted on high the Holy Flag of Truth, and may all true sons of Barathavarsha and the Empire stand by it and fight for Truth—for Truth is a principle that must triumph in the end. Let us, by all means, sweep away the narrow traditions and unspiritual (unchristian) feeling that make the Brotherhood of Man impossible. I trust everyone will bear in mind the exhortation of the noble minded Bishop who expressed the need of the hour as "a sincere effort on the part of individual men and women to look fairly at the facts of life in the spirit of Christ (which is the Spirit of Truth and of Self-Sacrifice) and to apply to their relations with all classes and all races the principle of Brotherhood." All India and "the better mind of India" which is keeping 'the Altar-Fire of Consciousness' (*Chidagnikunda*) alive by sacrificing their own individual selves therein say 'Amen!' to this.

As one who has been working now for eleven years uninterruptedly in the cause of truth, ever trying to keep "the Highest Ideal" before man, it gives me great pleasure to bear willing testimony to the truth of the Bishop's statement, that in spite of the frailties and failings of the majority of Engilshmen such as we ordinarily meet with in India, there are good souls and true who are working with a true heart, realising their responsibility to the World and the Empire.

# The Truth Behind the Coronation Durbar.

The "Ideal Englishman" in India not only stands for efficiency, for duty and for justice but he also stands still more definitely for Brotherhood and Love, though his lower passions and ambitions make him forget the highest ideal in the struggle to be ever a victor in the battle of life. I did come across the ideal Englishman some 11 years ago and I can speak of him only in the spirit in which he shone before the Holy Mystery of the Lord when he thirsted for a moment to know its meaning. On that momentous occasion was conceived the Mission of the Empire and the World which the Lord Bishop so impressively put before the August Congregation to whom he preached his thrilling sermon.*

After putting before the imperial congregation "the Final Goal" as "the Fatherhood of God and the Brotherhood of Man," the holy man inspired of God for the great occasion spoke, in words that must ring into the ears of all good men and true unto eternity, as follows :—

"**The permanent value** of any Empire or any social institution must depend upon its power of bringing near the Kingdom of God by making real and effective in the world the ideal of Brotherhood" that is to say, of "Christly Love"-*Paramkarunai* which feeds on and grows perfect by "Neighbourly Love" or *Jeevakarunium*.

"Here then lies the work of our Empire in the coming years, and let us not forget that *the achievement of this great end does not lie merely with statesmen and politicians*, but FAR MORE WITH THE ORDINARY PEOPLE IN THE ORDINARY ROUTINE OF DAILY LIFE."

The italics and small capitals are mine; and I emphasise it most because that is a truth which has impressed itself strongly on me and possessed my heart and soul these many years. Call it accident or what you will, I see the guiding Hand of Providence in the incident which brought me a note from the Editor of a leading Almanac and Directory for revised and "up to date" information concerning the work to which I have dedicated myself heart and soul just 11 years ago, giving it the universal name of "ANANDA MISSION" whose origin and aim as I just copied it for the Editor of the Directory I give below without mutilation or alteration. The ANANDA MISSION which aims at realising "the permanent value of any Empire or any social institution" as beautifully propounded by the Lord Bishop of Madras, was first conceived at Chidambaram after the *Arudradarisanam* of 1901, on the motion of an eminent Englishman who thirsted for a moment to know the truth of the Holy Mystery '*Chidambara Rahasyam*' and called into existence by the Grace of the Almighty at the instance of a true Englishman thirsting to know "the Truth as it presents it' to a seeker who seeksself now' it "without reference to this or that more or less imaginary divine system." Planned on Christmas Eve 1902, and founded on Thursday week of the New Year 1903, having for its aim, "the propagation of Truth and Knowledge as the Way to Health, Happiness and Life, through Self-Help, Self-Control and Self-Culture." "Our theism is the purification of the Human mind" and our motto is "Hitch your wagon to a star." We allow the fullest freedom of thought and action to all, demanding of them only consistency in thought, word and deed. Our methods of work are indicated by the Vedic injunctions we have adopted *viz.*, "*Satyam Vada*"—"Speak the Truth"; and *Dharmam Chara*." Do thy duty *i.e., Obey the Moral Law of thy Being*." Our Guardian Spirit is *Ananda Natesa*—"the Holy Ghost," and our leader and guide is *Sri Akhandânanda Satguru* to whom we bow in salutation and absolute obedience.

It was under the guidance of this Spirit that I suggested the name of Georgetown as a substitute for that odious name "Black Town" and did many other things which have met with Royal Approval. "Recognition" I did not seek and do not want, except the approval of one's own consciousness which I have since received in abundance though men may praise and blame one another according to the mood they find themselves in.

It does one's heart good to affirm and reaffirm "the Truth behind the Coronation Durbar" when it is brought home to men's minds in the most prominent and at the same time the most impressive and holy way on a solemn and sacred occasion like the solemn Church-Service in "the Coronation Durbar Camp," on a day which is devoted wholly and entirely to the Service of God. Let us all—King or subjects—realise "the Final Goal" which is the Unity of God and Comity of Nations.

For what does the Brotherhood of Man amount to in the end but the comity of nations, just as the brotherhood of man indicate the comity of class and creed in the Constitution of a State. "Nothing less than the Love and Self-Sacrifice of Christ will avail for the great work of Empire which God has entrusted to us (Indians and Englishmen alike) *to-day*"-the great Coronation Durbar Day-when India claims its Sovereign Emperor true as the man entrusted to keep the Ancient Ideal of Kingship unsullied and hand it down from generation to generation, "by making it real and effective in the world," *i.e. in every day life*, the ideal of Kingship which has been so solemnly preached in the name of God and heard with reverence on the Sabbath preceding this, the Great Coronation Durbar Day.—*Aum Tat Sat.*

Lalitalaya, Madras, S.
*12th December 1911.*

C. V. SWAMINATHA IYER, K. S. S. A.

* The Madras *Mail* in its issue of 16th December published only so far, while the whole appeared unabridged in the *Madras Standard* of 15th December and the *Indian Patriot* of 18th idem.

PRINTED AT THE SOUTH INDIAN PRESS, 18, LINGHI CHETTY ST., G. T. MADRAS.